# கவர்ச்சியான ஆடைகளுக்கு

## S. R. B.

No. 83

வாலாயமான பழய கடை

*Formerly* S. R.

பாலுசாமி அய்யர்

அண்டு சன்ஸ்



இக் கலியாண காலத்தில்
மாதர் மனதிற்குவந்த
சேலைகள்
கிடைக்குமோ எனும்
கவலை வேண்டாம்



கைவசமுள்ள நவீன நூதன
ஜவுளி ரகங்களை நேரில் வந்து
பார்வையிட உங்களை
வணக்கத்துடன் அழைக்கிறோம்



*உங்கள் நல்வரவை எதிர்பார்க்கும்*

## S.R.B. குப்புசாமி அய்யர் & ஸன்

83 நைனியப்பநாயகன் தெரு (போன் 3506) P.T. மதராஸ்

பிரான்ஞ்ச் 230 கீழ்மாரட்டு வீதி (போன் 36) மதுரை



# கொலம்பியா புதிய வெளியீடு!



சங்கீத வித்வான்

## சித்தூர் சுப்ரமணிய பிள்ளை

மதுரை விஸ்வநாத சர்மா பிடில்

தஞ்சாவூர் ராமதாஸ் ராவ் மிருதங்கம்

மதராஸ் வேணு நாயகர் கஞ்சிரா

மன்னார்குடி நடேச பிள்ளை முகர்சிங்

GE. 6103 [ மாவல்ல காதம்ம
குலமுலோன்

G.H.RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்.
S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.

# ஸிம்ஸன் & கம்பெனி லிமிடெட்

மோட்டார் இன்ஜினியர்கள்

மவுண்ட்ரோட்

மதராஸ்



## ஸிம்ஸன் கம்பெனியின் வளர்ச்சி

40 ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டில் மோட்டார் வண்டிகள் ஒரு புதுமையாக இருந்த காலத்தில் ஸிம்ஸன் கம்பெனியார் மேற்படி மோட்டார் வண்டிகளின் வியாபாரம் செய்ய ஆரம்பித்து இன்றளவும் பெயரும் புகழும் ஓங்க நடத்தி வருவதை நீங்கள் அறிவீர்கள். இத்தகைய நீண்ட கால சிறப்பிற்கு அவர்களது உழைப்பு ஒரு காரணமானாலும் அவர்களுடைய இத் தனிச் சிறப்பிற்கு காரணம் உங்களுடைய இடைவிடாத ஆதரவுதான் என்று கருதுகிறார்கள்.



கல்கி

# பொருளடக்கம்

மலர் 2 இதழ் 31 | 1943 ஜூன் 1 | சுபானு௵ வைகாசி௴ 18உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.

★ சென்னைத் தங்கசாலைத் தெருவில் ஒரு பழம் கட்டிடம் இருக்கிறது. அதற்குள் நுழைந்து விட்டோமானால் நமக்குத் திகைப்பாகவே இருக்கும். ஒரே மாதிரியான கதர்ச் சட்டைகளும், கதர்க் குல்லாக்களும் அணிந்த உபாத்தியாயர்கள் பிள்ளைகளுக்கு அருமையாகப் பாடம் சொல்லிக் கொடுப்பதையும், பிள்ளைகள் உபாத்தியாயர்களிடம் அன்பும் பக்தியும் பூண்டிருப்பதையும் பார்த்தோமானால், பழைய வேதவியாசர் காலத்துக் குருகுலங்கள் ஞாபகத்துக்கு வரும். இப்படிப் பழைய முறையில் நடக்கும் இந்த "ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்" என்னும் பள்ளிக்கூடம் சென்ற ஏழெட்டு வருஷங்களாக எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் இம் மாகாணத்திலேயே முதன்மையாக நிற்கிறது என்பது எவ்வளவு வியப்பான விஷயம்? இன்னும், இப் பள்ளிக்கூடத்தில் எல்லாப் பாடங்களும் தாய் மொழியிலேயே போதிக்கப்படுகின்றன என்பதையும், இப் பள்ளி மாணவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சை, பாரதி பாட்டுப் போட்டி முதலியவற்றில் சிறந்து விளங்குகிறார்கள் என்பதையும் அறிந்தோமானால், "ஆகா! இப் பள்ளிக்கூடத்தை நடத்தும் தலைமை ஆசிரியர் யாரோ?" என்று வியந்து, அவரைப் பார்க்க விரும்புவதும் இயல்பல்லவா? அந்தத் தலைமை ஆசிரியர் குருகுல தர்ம ஆசார்ய ஸ்ரீ கே. ரங்கசாமி ஐயங்காரை நேரில் பார்க்காவிட்டாலும், படத்திலாவது பார்த்து மகிழுங்கள்.

★




★

ஜூபிடர் தயாரிப்பு



ஜூன் இரண்டாவது வாரத்தில் தமிழ் நாட்டின்
எல்லா முக்கிய நகரங்களிலும் திரையேறுகிறது



ஜூபிடர் பிக்சர்ஸ்

# குபேர குசேலா

SIP RELEASE

JUPITER PICTURES



டைரக்ஷன்: R. S. மணி & B. S. ராமையா



## ஸௌத் இந்தியா பிக்சர்ஸ் ரிலீஸ்

"குபேர குசேலா" பாட்டுக்களை "கொலம்பியா" ரிகார்டுகளில் கேளுங்கள்.




# கல்கி

மலர் 2 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 31


## என்ன சேதி?

### கிணற்றில் விளக்கு

கிணற்றுக்குள்ளே ஓர் அற்புதமான சுடர் விளக்கு பிரகாசித்துக் கொண்டிருந்தது. வெகு காலம் அதை ஒருவரும் பொருட்படுத்தவில்லை. நல்ல கண் உடையவர் ஒருவர் கிணற்றுக்கு மேலே தோன்றிய ஒளியைக் கொண்டு கிணற்றுக்குள்ளே தீபம் இருக்க வேண்டுமென்று நிர்மானித்தார். அதை வெளியிலே எடுத்து வைத்து, திரியைத் தூண்டி, நன்றாய்ப் பிரகாசிக்கச் செய்து, "ஆஹா! எப்பேர்ப்பட்ட தீபம், பாருங்கள்!" என்றார். எல்லாரும் பார்த்து மகிழ்ந்தார்கள். கிணற்றுக்குள்ளிருந்த அந்தச் சுடர் விளக்குத்தான் நாகர்கோவில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. விளக்கை வெளியிலே கொண்டு வந்து காட்டியவர் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள்.

### கவிமணிக்கு உபசாரம்

செட்டிமார் நாட்டிலுள்ள தமிழன்பர்கள் கவிமணியைப் பாராட்டி உபசரிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். ஆண்டு தோறும் பங்குனியில் நடைபெறும் கம்பன் விழாவை வியாஜமாகக் கொண்டு, ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையைத் தருவிக்க எண்ணினார்கள். ஆனால் அதிகாரவர்க்கப் பிரதிநிதிகள், "கம்பன்தான் போன வருஷத்தில் தங்கிக் கம்பியை அறுத்துத் தண்டவாளத்தைப் பெயர்த்தான்" என்று நினைத்தார்களோ, என்னமோ தெரியவில்லை! கம்பன் விழாவுக்குத் தடை உத்தரவுகளை விதித்தார்கள். எனவே கம்பன் விழா கைவிடப்பட்டது. ஆனால், செட்டிநாட்டுத் தமிழன்பர்கள் கவிஞரைப் பாராட்டும் நோக்கத்தைக் கைவிடவில்லை. ஆத்தங்குடி லோகநாயகி வித்தியாசாலை விழாவைக் காரணமாக வைத்துக் கவிமணியைத் தருவித்தார்கள். ஆத்தங்குடியில் செட்டி நாட்டுத் தமிழன்பர்கள் கூடிக் கவிக்கு உபசாரம் நடத்தினார்கள். உபசாரம் என்றால், எப்பேர்ப்பட்ட உபசாரம்?

### துணி கிராக்கியும் காகிதக் கிராக்கியும்

யுத்தம் காரணமாகத் துணிமணிகளின் விலை ரொம்ப கிராக்கியாய்ப் போய்விட்டதல்லவா? அதற்காக, கவிமணிக்குப் பொன்னாடை — பீதாம்பரம் — போர்த்தினார்கள்! காகிதம் ரொம்ப ரொம்பக் கிராக்கியாயிருக்கிறதல்லவா? இதற்காக, வெள்ளித் தகட்டில் பொன் எழுத்தில் உபசாரப் பத்திரம் எழுதிப் படித்துக் கொடுத்தார்கள்!



கழுத்திலிருந்து கால் வரை தொங்கிய மாலைகள் போட்டு, மனமார, வாயார வாழ்த்தினார்கள். இப்படியெல்லாம் செய்து, கவி மணியை அழும்படி அடித்து விட்டார்கள்! — ஆனந்தத்தினால்தான்! இன்னும் செட்டிமார் நாட்டில் கவி மணியின் விஜயம் ஒரு விழாவாகவே கொண்டாடப் பட்டது. ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் கவி மணிக்குச் சிறந்த விருந்து அளித்து 1001 ரூபாய் பண முடிப்பும் அளித்தார். காரைக்குடியில்

# நிகழ்ச்சிச் சித்திரம்

-உம்மன்





















ஸப்ரு, ஜயக்கர் முதலிய சர்வகட்சி மகாநாட்டுத் தலைவர்கள் "மகாத்மாவையும் காங்கிரஸ் தலைவர்களையும் விடுதலை செய்யாமற்போனால் பகிரங்க விசாரணைக்காவது கொண்டுவாருங்கள்!" என்று கேட்டார்கள். "முடியாது!" என்று பதில் வந்து விட்டது.











புதுமைப் பதிப்பகத்தாரும் இன்னும் பல ஸ்தாபனங்களும் பிரமுகர்களும் கவி மணிக்கு வரவேற்புக்கு மேல் வரவேற்பும் உபசாரத்துக்கு மேல் உபசாரமும் அளித்தார்கள். தமிழ் நாட்டார் தமிழ்க் கவிஞர்களை அவர்களுடைய வாழ்நாளில் போற்றுவதில்லை யென்ற அவப் பெயர் சென்ற மாதத்தோடு நீங்கி ஒரு புது யுகமே தோன்றி விட்டது. இதற்குக் காரண புருஷர்களாயிருந்த "குமரன்" ஆசிரியர் ஸ்ரீ முருகப்பா முதலிய செட்டிநாட்டுத் தமிழன்பர்களைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

## ஞாபகச் சின்னங்கள் ●

இந்தியாவில் முஸ்லிம்கள் பெரும்பான்மையோரா யுள்ள மாகாணங்களிலே எல்லைப்புற மாகாணமானது 'காங்கிரஸ் கோட்டை'யா யிருந்து வந்தது. எல்லைப்புற காந்தி அபதுல் கபூர்கானின் ஏக தலைமையில் எல்லைப்புற முஸ்லிம்கள் காங்கிரஸ் பக்தியில் தலை சிறந்து நின்றார்கள். அப்பேர்ப்பட்ட மாகாணத்தில் இப்போது முஸ்லிம் லீக் மந்திரி சபை ஏற்பட்டு விட்டது! இரண்டு வருஷத்துக்கு முன் இந்தியாவில் ஒரு மாகாணத்திலாவது முஸ்லிம் லீக் மந்திரி சபை இல்லை. இப்போது ஐந்து மாகாணங்களில் முஸ்லிம் லீக் மந்திரிகளோ, அல்லது முஸ்லிம் லீக்குக்குக் கட்டுப்பட்ட மந்திரிகளோ 'ஆட்சி' செலுத்துகிறார்கள். இவர்களுடைய மந்திரி சபையில் சேர்ந்து ஒத்துழைக்கும் 'ஹிந்து'க்களும் ஒவ்வொரு மாகாணத்திலும் இருக்கிறார்கள்! — இந்த மந்திரி சபைகள் எல்லாம் இரண்டு வருஷத்துக்கு முன்னால் காங்கிரஸ் செய்த தவறின் ஞாபகச் சின்னங்களாக விளங்குகின்றன! ஏழு மாகாணங்களின் ஆட்சியைக் காங்கிரஸ்காரர்கள் பறி கொடுத்தது எவ்வளவு பிசகான காரியம் என்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

## சென்னைத் தேர்தல் ●

அந்தப் பழைய தவறைப் பற்றி நினைக்கும்போது, சென்னையில் நடக்கப் போகும் புதிய தேர்தலும் ஞாபகத்திற்கு வருகிறது. இந்தத் தேர்தல் சம்பந்தமாக வோட்டர்கள் அசிரத்தை கொள்வதற்கு வேண்டிய காரணங்கள் இருக்கின்றனவென்பது உண்மைதான். இந்திய சட்ட சபையில் இருந்த காங்கிரஸ் மெஜாரிட்டி என்னவாயிற்று? ஏழு மாகாண சட்டசபைகளில் மகத்தான காங்கிரஸ் மெஜாரிட்டிகள் இருந்தனவே? அந்த பலத்தையெல்லாம் காங்கிரஸ் தலைவர்கள் எந்த வழியில் உபயோகப்படுத்தினார்கள்? — அவ்வளவு பலத்தையும் வேண்டாமென்று தள்ளிவிட்டுத்தானே காங்கிரஸ் தலைவர்கள் சிறையில்போய் உட்கார்ந்து கொண்டார்கள்! இப்போது ஸ்ரீ ஜி. ரங்கைய நாயுடுகாரு போய் என்னத்தைச் சாதித்துவிடப் போகிறார்? மகாத்மாவுக்கும் ஜவாஹர்லாலுக்கும் பெடரல் கோர்ட்டுத் தீர்ப்புக்கும் அமெரிக்க அபிப்பிராயத்துக்கும் பயப்படாமல் பிடிவாதமாயிருக்கும் பிரிட்டிஷ் சர்க்கார் ஸ்ரீ ஜி. ரங்கைய நாயுடுவின் மீசைக்குப் பயந்து நடுங்கி, "இந்தாருங்கள் சுயராஜ்யம்!" என்று கொடுத்து விடப் போகிறார்களா? — இப்படியெல்லாம் கேட்கத்தோன்றுவது இயற்கையே. ஆனால், காங்கிரஸ் பெயரால் நிற்கும் ஸ்ரீ ஜி. ரங்கைய நாயுடு தோல்வியடைந்தால் அதன் பலன் என்ன ஆகும் என்பதையும் யோசித்துப் பார்க்கவேண்டு மல்லவா? அப்படிப் பார்க்கும்போது, ஸ்ரீ ஜி. ரங்கைய நாயுடு வெற்றி யடைவது எவ்வளவு முக்கியமானது என்று தெரியவரும். எது எப்படியிருந்தாலும் சென்னை நகரம் காங்கிரஸைப் புறக்கணித்து விட்டது என்ற அவப் பெயர் ஏற்படக் கூடாது. எனவே, 5-வ தேர்தலில் சென்னை நகரிலுள்ள இந்திய சட்ட சபை வோட்டர்கள் தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஸ்தானத்திற்கு நிற்கும் ஸ்ரீ ஜி. ரங்கைய நாயுடுவுக்கு அபரிமிதமான வோட்டுகளை அளித்துப் பெருமித வெற்றியடையச் செய்யவேண்டும்.

சிலேட்டைச் சித்திரம்

### செவிச் செல்வம்



# கொன்று விட்டார்கள்!

இந்தியாவின் அரசியல் பிரச்னை சமரசமாகத் தீரலாமென்ற ஆசை சென்ற வாரம் வரையில் பலருக்கு இருந்து வந்தது. அதன் மூலம் இந்தியா தேச மக்கள் ஏக மனதாக யுத்த முயற்சிகளில் உற்சாகமாக ஈடுபடுவது சாத்தியமாகும் என்ற நம்பிக்கையும் அவர்கள் கொண்டிருந்தார்கள். அந்த நம்பிக்கையை அதிகார வர்க்கத்தார் கொன்று விட்டார்கள்! அப்படி அதிகாரவர்க்கம் கொன்ற நம்பிக்கையை ஜனாப் ஜின்னா சாகிபு சும்மா விட்டு விடவில்லை. அதன்மேல் இன்னும் நாலு அடி போட்டுக் குழியில் தள்ளி மூடிச் சமாதியும் எழுப்பிவிட்டார்!

இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்க பிரிட்டிஷார் மறுத்து வருவதற்கு முக்கியமாக என்ன காரணம் சொல்லி வருகிறார்கள்? ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை ஏற்படவில்லை என்பதைத் தான். இது உண்மையான காரணம் அல்ல என்பது நமக்கெல்லாம் தெரிந்த விஷயமே. ஆனாலும், அதை ஒரு சாக்காக பிரிட்டிஷார் உபயோகிப்பது இதுவரை சாத்தியமாயிருந்தது. "இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுக்க நாங்கள் காத்துக் கொண்டிருக்கிறோம். 'இந்தாருங்கள்! இந்தாருங்கள்!' என்று மூச்சு விடாமல் கதறிக் கொண்டிருக்கிறோம். இந்தியர்கள்தான் தங்களுக்குள் ஒற்றுமைப் படாமல் சண்டை போட்டுக்கொண்டு சுயராஜ்யத்தை வாங்கிக் கொள்ள மறுக்கிறார்கள்!" என்று பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் உலகத்தின் முன்னிலையில் பிரசாரம் செய்வது சாத்தியமாயிருந்தது.

மகாத்மா காந்தி சிறையிலிருந்து ஜனாப் ஜின்னாவுக்கு எழுதிய கடிதத்தை அனுப்ப எப்போது அதிகாரவர்க்கத்தார் மறுத்தார்களோ, அந்த நிமிஷத்தில், "இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்க ஹிந்து-முஸ்லிம் வேற்றுமைதான் குறுக்கே நிற்கிறது" என்ற சாக்கு பிராணனை விட்டது!

இந்தச் சோக சம்பவத்துக்கு — இந்த அரசியல் மயான காண்டத்துக்கு — ஆதி காரணரான புருஷர் ஜனாப் ஜின்னா என்பது தெரிந்த விஷயம். சென்ற மாதம் நடந்த முஸ்லிம் லீக் மகாநாட்டில் ஜனாப் ஜின்னா, தம்மை 'முஸ்லிம் இந்தியா'வின் சர்வாதிகார பாதுஷாவாக முடிசூட்டிக் கொண்டு, சில வீரதீர வார்த்தைகளைப் பேசினார். "இந்த காந்தியானவர் வைஸ்ராய்க்கு என்னத்திற்காகக் கடிதம் எழுதுகிறார்? இந்திய அரசியல் பிரச்னை தீரவேண்டுமானால் எனக்கல்லவா அவர் கடிதம் எழுத வேண்டும்! எனக்கு மட்டும் அவர் கடிதம் எழுதினால், அதைத் தடுப்பதற்கு யார்?" என்று கேட்டார். இன்னும் அவர் "காந்தியும் நானும் ஒத்துப் போய் விட்டால் அப்புறம் இந்தியாவின் சுதந்திரம் என்ன பிரமாதம்? இந்த பிரிட்டிஷ்காரர்களை இரண்டு பேருமாகச் சேர்ந்து உதைத்துத் துரத்த வேண்டியதுதானே?" என்றெல்லாம் அமர்க்களம் செய்தார்.

அப்போது நம்மில் பலர் ஜனாப் ஜின்னா காந்திஜியையும் காங்கிரஸையும் பற்றி அதே மூச்சில் வசை புராணம் பாடியிருப்பதை எண்ணி, இப்படித் திட்டுகிற மனிதருக்கு மகாத்மா எப்படிக் கடிதம் எழுதுவார் என்று நினைத்தோம்.

ஆனால், மகாத்மா, மகாத்மாவாகையால், அந்த வசை புராணத்தையெல்லாம் பொருட்படுத்தவில்லை. ஜனாப் ஜின்னாவின் நோக்கத்தைச் சந்தேகிக்கவும் இல்லை. ஜனாப் ஜின்னாவுக்குக் கடிதம் எழுதவே எழுதினார். கடிதத்தில் "என்னுடைய இருதயம் தங்கள்பால்தான் எப்போதும் இருக்கிறது. தங்களைப் பார்த்துப் பேச விரும்புகிறேன்" என்று எழுதியிருந்தார்.— இதைப் படிக்கும்போது நமக்கெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாகிறது.

ஆனால், அதிகார வர்க்கமோ மகாத்மா கடிதத்தைப் பார்த்ததும் பிடரி மயிரைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்தது. "யார், காந்தியா? ஜின்னாவுக்குக் கடிதமா? நிறுத்து!" என்று கர்ஜித்தது. இன்னும் ஜின்னாவைப் பார்த்து, "உமக்குக் காந்தி ஒரு கடிதம் எழுதினார்; அதை நிறுத்தி விட்டோம்!" என்று குத்தலாய்ச் சொல்லிற்று. அதாவது, "ஜின்னாவுக்கும் பெப்பேதான்!" என்று அழுத்தமாய் உரைத்தது.

எனவே, ஜனாப் ஜின்னாவுக்கு ஓர் அற்புதமான சந்தர்ப்பம் வாய்த்தது. அவருடைய வீரதீரப் பேச்சுக்களையெல்லாம் செயலில் கொண்டு வருவ

தற்குச் சரியான சந்தர்ப்பம் கிடைத்தது.

ஆனல், ஜனுப் ஜின்னு என்ன செய்தார்? ''அதெப்படி காந்தி எனக்கு எழுதிய கடிதத்தை நீங்கள் தடுக்கலாம்?'' என்று அதிகார வர்க்கத்துடன் போர் தொடங்கினரா? அல்லது, ''மேலே என்ன செய்யலாம்?'' என்று வெளியிலுள்ள மற்ற தேசத் தலைவர்களுடன் கலந்து ஆலோசித்தாரா? அல்லது, மகாத்மா தமக்குக் கடிதம் எழுதியது பற்றித் திருப்தியாவது தெரிவித்தாரா?—இதெல்லாம் ஒன்றும் செய்யவில்லை. மகாத்மாவை இன்னும் ஒரு அத்தியாயம் திட்டினர்! ''இந்த மாதிரி கடிதமா நான் கேட்டேன்?'' என்ருர். ''பிரிட்டிஷ் சர்க்காருக்கும் எனக்கும் சண்டை மூட்டிவிட இது ஒரு சூழ்ச்சி!'' என்ருர். அவருடைய பழைய பேச்சை ஞாபகப்படுத்திய பத்திரிகைக்காரர்கள் மேலும் ஒரு பாய்ச்சல் பாய்ந்தார்!

ஜனுப் ஜின்னுவின் 'பாகிஸ்தான்' பிடிவாதம் பகிரங்கமானது. அதில் மூடுமந்திரம் ஒன்றும் கிடையாது. எனவே, மகாத்மா அவரைப் பார்க்க விரும்பிக் கடிதம் எழுதினுரென்ருல், 'பாகிஸ்தான்' கோரிக்கையைப் பற்றி விவாதிக்கவும், அதைப் பற்றி ஒரு சமரச முடிவுக்கு வரவும் மகாத்மா விரும்புகிருர் என்றே ஏற்படும். ஜனுப் ஜின்னுவுக்கு அதைப்பற்றிச் சந்தேகம் இருந்தால் சுலபமாக நிவர்த்தி செய்து கொண்டிருக்கலாம். ''என்னைப் பார்க்க நீங்கள் விரும்புவதின் நோக்கம் என்ன? முஸ்லிம்களின் சுயநிர்ணய பாத்தியதையைப் பற்றிப் பேசத் தயாரா?'' என்று கேட்டிருக்கலாம். இதைப் பத்திரிகையில் பிரசுரித்தால், மகாத்மாவுக்குத் தெரிந்து போகிறது. மறுபடியும் அவருடைய பதிலைப் பார்த்துக் கொண்டு மேலே செய்ய வேண்டியதைத் தீர்மானிக்கலாம்.

ஜனுப் ஜின்னு அப்படியெல்லாம் செய்யவில்லை. மகாத்மாவின் 'வஞ்சக' எண்ணத்தைப் பற்றி அவருக்கு அவ்வளவு நிஸ்ஸந்தேகம்!—உண்மையென்ன வென்பதையும் நல்லவேளையாக அவரே வெளியிட்டு விட்டார். பிரிட்டிஷ் சர்க்காருடன் எந்தக் காரணத்துக்காகவும் அவர் சண்டை பிடிக்க விரும்பவில்லை!—அவ்வளவுதான். முன்னே பேசியதெல்லாம் வெறும் ஜம்பப் பேச்சு!

பிரிட்டிஷ் சர்க்காருடன் ஜனுப் ஜின்னு சண்டை பிடிக்க விரும்பாததற்குக் காரணம் இருக்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்கிருேம். அவர் எதற்காகச் சண்டை பிடிக்க வேண்டும்?—அவர் எந்தப் பிரதேசங்களைப் பாகிஸ்தான் ஆக்கவேண்டுமென்று விரும்புகிருரோ, அந்தப் பிரதேசங்கள் இப்போது முஸ்லிம் லீக் ஆட்சிக்குள் வந்து விட்டன. மேலேயுள்ள பிரிட்டிஷ் சர்க்காரோ ஜனுப் ஜின்னுவின் சிநேகத்தை விரும்புகிருர்கள். பார்லிமெண்டில் யாரோ ஒரு புத்திசாலி ''ஜனுப் ஜின்னுவைச் சிறையில் போடுவதற்கென்ன?'' என்று கேட்டதற்கு, ''ஆகா! என்ன கர்ண கடூரமான வார்த்தை இது? ஜனுப் ஜின்னு நம்முடைய பிராண சிநேகிதராயிற்றே?'' என்று இந்தியா மந்திரி அமெரி பதில் சொல்லியிருக்கிருர்.

எனவே, ஜனுப் ஜின்னு எதற்காக பிரிட்டிஷ் சர்க்காருடன் சண்டை பிடிக்க வேண்டும்? காந்திஜியுடன் தான் எதற்காகச் சமரசம் பேச வேண்டும்?

* * *

இதையெல்லாம் எண்ணும்போது காங்கிரஸும் தேசிய இயக்கமும் எவ்வளவு நிராதரவான, நிர்ப்பலமான நிலைமையை அடைந்து விட்டது என்பதை நாம் உணர்கிருேம். இந்தியாவின் சுதந்திர விரோதிகளின் கை எவ்வளவு தூரம் ஓங்கிவிட்டது என்பதையும் அறிகிருேம்.

ஆனல் ஒரு விஷயம் இருக்கிறது. ஜனுப் ஜின்னுவும் கர்னல் அமெரியுமே இந்தியாவின் விதியை என்றென்றைக்கும் நிர்ணயித்து விட முடியாது. சர்ச்சிலுக்கும் ரூஸ்வெல்ட்டுக்கும் கூட அவ்வளவு வல்லமை கிடையாது. இவர்களுக்கெல்லாம் மேலே நின்று உலகத்தை இயக்கும் சக்தி ஒன்று இருக்கத்தான் இருக்கிறது.

துரியோதனனும் சகுனி மாமாவும் சேர்ந்து சூழ்ச்சி செய்து பஞ்சபாண்டவர்களைப் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அக்ஞாத வாசமும் செய்வதற்கு அனுப்பின போது, கௌரவ சாம்ராஜ்யத்தில் இனிமேல் அரசியல் பிரச்னையே கிடையாது என்றுதான் நினைத்தார்கள். ஆனல், அவர்கள் நினைத்தபடி நடக்கவில்லையல்லவா?

சென்னை பாரகனில்

28 - 5 - 43 வெள்ளி முதல் மகத்தான ஆரம்பம்





கோவை ராஜா டாக்கீஸில்

26-5-43 முதல் 2-வது வாரம்

தமிழ் நாட்டில் மற்ற இடங்க
ளில் விரைவில் எதிர்பாருங்கள்



DIRECTION :

A. T. கிருஷ்ணஸ்வாமி

R. நாகேந்திர ராவ்

SUPERVISION :

A. V. மெய்யப்பன்







லக்ஷ்மிபாய் · சுப்பய்யா நாயுடு · நாகேந்திர ராவ் நடித்த

# ஹரிச்சந்திரா

(கன்னடம்) ஸ்டுடியோ:- பிரகதி

a FAMOUS TALKIE RELEASE

City Release By Bharathi Films, Madras.



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## அரிச்சந்திரன்

இந்த இதழில் வெளியாகி யிருக்கும் "தமிழ் வளர்த்த கதை"யில், தமிழ்த் தாயின் சந்ததிகளைப் பற்றி ஆசிரியர் பி. ஸ்ரீ. குறிப்பிட்டிருக்கிறார். தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் ஆகிய பாஷைகள் தமிழ்மொழியிலிருந்து தோன்றியவை என்று சாதிக்கிறார். மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள் எல்லாரும் ஒரு முகமாக மேற்கண்ட முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

தமிழ்த் தாயின் சந்ததிகளில், தெலுங்கு அதிகப் பிரசங்கிப் பிள்ளையாய்ப் போய் விட்டது. என்னவெல்லாமோ வேஷத்தைப் போட்டுக் கொண்டு உருமாறி விட்டது. தமிழைத் தாய் என்று சொல்லிக் கொள்வதற்கே வெட்கப் படுகிறது!

ஆனால், கன்னடம் — மலையாளம் பாஷைகள் அப்படியில்லை. தமிழ்த் தாயை விட்டு அவை வெகு தூரம் அப்பாற்பட வில்லை. கிட்டத்தட்டத் தமிழாகவே இருக்கின்றன.

முதன் முதலாக நான் பார்த்த கன்னடம் பேசும் படம் "அரிச்சந்திரா"வில் மேற்கூறிய உண்மை நன்கு தெளிவாயிற்று. படத்தைப் பார்க்க ஆரம்பித்துக் கொஞ்ச நேரம் வரையில், பக்கத்தில் இருந்த கன்னடம் தெரிந்த நண்பர் எனக்கு அர்த்தம் சொல்லிக் கொண்டுவந்தார். பிறகு, நான் அவருக்கு அர்த்தம் சொல்ல ஆரம்பித்தேன்! இதனால், அவர் அர்த்தம் சொல்வதை நிறுத்தவேண்டியதாயிற்று. பின்னர், இரண்டு பேரும் பேசாமல் படத்தைப் பார்த்து அநுபவிக்கத் தொடங்கினோம்.

சந்திரமதி — ரோஹிதாட்சன்



ஆமாம்; மெய்ம் மறந்து பார்த்து அநுபவிக்க வேண்டிய படந்தான்!

* * *

ஆதி காலத்திலிருந்து இன்று வரையில் உலகத்தில் எத்தனையோ லட்சம் கதைகள் கற்பனை செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள் எல்லாம் அரிச்சந்திரன் கதைக்கு ஈடானது ஒன்றுமே இல்லை யென்று சத்தியம் செய்யலாம்!

சகல சௌபாக்கியங்களும் பெற்றிருந்த மகாராஜா, அவருடைய பட்ட மகிஷி, ஏக புத்திரன் — இவர்கள் மகத்தான சுக போக சம்பத்திலிருந்து கொடியதிலும் கொடியதான துன்ப வாழ்க்கையை அடைகிறார்கள். துன்பமென்றால், அதைக் காட்டிலும் அதிக துன்பத்தைக் கற்பனை செய்யவே முடியாது. மகாராஜா தம் பட்ட மகிஷியையும், ஏகபுத்திரனையும் அடிமையாக்குகிறார்.

பிறகு, ஒரு சண்டாளனுக்குத் தன்னையே விற்றுக் கொண்டு சுடலை காக்கப் போய்ச் சேர்கிறார். இங்கேயே துன்பத்தின் எல்லையை யடைந்து விட்டோம் என்று தோன்றும். ஆனால், அதற்கு மேலும் கதை போகிறது. அவர்களுடைய ஒரே பிள்ளை பாம்பு கடித்துச் சாகிறது. குழந்தையின் பிரேதத்தைப் பெற்ற தாய் எடுத்துக் கொண்டு கணவன் காவல் புரியும் சுடலைக்குப் போகிறாள். தகனத்துக்குரிய பணம் அவளிடம் இல்லை. பணம் வாங்கிக்கொண்டு வரும்படி பதியினால் திருப்பி யனுப்பப் படுகிறாள்.

இதைக் காட்டிலும் இன்னும் துன்பம் உண்டா? — உண்டு! போகும் வழியில் சந்திரமதி கொலைக் குற்றம் சுமத்தப் படுகிறாள்.

இன்னமும் ஏதாவது துன்பம் பாக்கி இருக்கிறதா? — இருக்கிறது!

கொலைக் குற்றத்துக்குள்ளான மனைவியைக் கழுத்தை வெட்டிக் கொல்லும் கடமை அரிச்சந்திரனுக்கே வந்து சேருகிறது!

இவ்வளவும் ஒரு இலட்சியத்துக்காக! சத்தியத்தைக் காப்பதற்காக!

முடிவில், அரிச்சந்திரன் வெற்றி கொள்கிறான்; தேவர்கள் தோல்வியடைகிறார்கள்.

எப்பேர்ப்பட்ட கதை! எப்பேர்ப்பட்ட இலட்சியம்! மானுஷ்யத்தைத் தெய்வீகத்துக்கு மேலே யல்லவா உயர்த்தி விடுகிறது!

இவ்வளவு உயர்ந்த கதையை நல்ல முறையில் டாக்கியாக எடுத்தால் அதை விடச் சிறந்த தொண்டு ஒன்றுமில்லை; ஆபாசப் படுத்தி எடுத்தால் அதைக் காட்டிலும் தீங்கும் வேறு ஒன்றுமில்லை.

இந்த கன்னட டாக்கி முதல் வகையைச் சேர்ந்தது; கலைக்கும் சமூகத்துக்கும் மிகச் சிறந்த தொண்டு.

* * *

இந்தக் கன்னட "அரிச்சந்திரா"வில் நடிக்கும் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பாகத்தை மிகத் திறமையாகவும், உணர்ச்சியுடனும் நடித்திருக்கிறார்கள். அரிச்சந்திரனாகவும் சந்திரமதியாகவும் நடித்திருப்பவர்கள் நடிப்புக் கலையின் சகல இரகசியங்களையும் அறிந்தவர்களாகத் தோன்றுகிறது. அவர்களுடைய முகத் தோற்றமே நமக்கு அநுதாபத்தை உண்டாக்குகிறது. ரோஹிதாசனைப் பார்க்கும்போதே அன்பும் பரிதாபமும் ஏற்படுகின்றன.

சோகரஸத்தை உண்மையான சோகரஸம் தோன்றும்படி நடிப்பது மிகவும் கடினம். சில டாக்கிகளில் கதாநாயகி கண்ணீர் விட்டு விம்மி அழும்போது சபையினர் அபாரமான நகைச்சுவையை அநுபவித்துச் சிரிப்பதுண்டு. இம்மாதிரி காட்சியைச் சமீபத்திலே கூட நான் தமிழ் டாக்கிகளிலே பார்த்தேன். அம்மாதிரி அசந்தர்ப்ப நகைச்சுவை இந்தப் படத்தில் கிடையவே கிடையாது. கதாபாத்திரங்கள் கஷ்டப்பட்டுக் கண்ணீர் விடும்போது நாமும் கட்டாயம் கண்ணீர் விட்டே தீர வேண்டும். உண்மையில், கொட்டகையை விட்டு வெளியே வரும்போது, ஒவ்வொருவரும், "நான் ரொம்ப அழுதுட்டேன்!" "நீ ரொம்ப அழுதுட்டியோ?" என்று விசாரித்துக் கொண்டு போவதைக் கேட்கலாம். எல்லாருடைய கண்களும் சிவந்து கலங்கி யிருப்பதையும் பார்க்கலாம்.

உண்மையான, உயர்தர நகைச் சுவையும் இப்படத்தில் இல்லாமற் போகவில்லை. அரிச்சந்திரன் முதலியவர்களைத் துன்புறுத்தி நட்சத்திரய்யனுக்கே அலுத்து விடுகிறது. விசுவாமித்திரரிடம் வருகிறான். அவர் அவனைக் கண்டித்துத் திரும்பிப் போகச் செய்கிறார். அப்போது நட்சத்திரையன் "சுவாமி! அரிச்சந்திரன்தான் முன்னமே பொய் சொல்லி விட்டானே?" என்கிறான். "எப்போது?" என்று விசுவாமித்திரர் திடுக்கிட்டுக் கேட்கிறார். "தங்களைப் 'பரம தயாளு' என்றும், 'கருணாநிதி' என்றும் சொன்னானே, அது பொய்தானே?" என்று நட்சத்திரய்யன் சொல்லும் பதிலை நினைக்கும் போதெல்லாம் சிரிக்க வருகிறது.

மற்றும், காசிவாசி காலகண்டய்யர் சந்திரமதியை விலைக்கு வாங்கும் கட்டத்தில் ஒரு சிறு மாறுதலை ஏற்படுத்தி நல்ல ஹாஸ்யத்துக்கு இடமாக்கி யிருக்கிறார்கள். காலகண்டய்யர் மார்க்கட்டில் சாமான் வாங்கிக் கொண்டிருந்தபோது, விசுவாமித்திரர் கட்டளைப்படி அக்கினி பகவான் காலகண்டய்யர் ரூபந் தரித்துச் சந்திரமதியையும் ரோஹிதாசனையும் வாங்கிக்கொண்டு வந்து அவருடைய வீட்டில் விட்டு விட்டுப் போகிறார். பிறகு உண்மைக் காலகண்டய்யர் வீட்டுக்கு வரும்போது அவருக்கும் மிஸ்ஸஸ் காலகண்டய்யருக்கும் ஏக ரகளையாய்ப் போய்விடுகிறது. அய்யர்வாளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று அம்மாள் தீர்மானிக்கிறாள். "சந்திரமதியை நான் வாங்கி வரவில்லையே?" என்று அவர் சொல்ல ஆரம்பிக்கும் போதெல்லாம், அந்த அம்மாள், "அடே! கௌண்டின்யா! எலுமிச்சம்பழத்தைக் கொண்டுவா!" என்பது வெகு வேடிக்கையா யிருக்கிறது.

சோகரஸம், ஹாஸ்ய ரஸம் எல்லாம் ஒருபுற மிருக்க,—இந்தப் படத்தில் உள்ள

காலகண்டன் — நட்சத்திரய்யன்



பயானக ரஸத்தையும் குறிப்பிட வேண்டும். இந்த ரஸத்துக்குக் காரணமான நாக ஸர்ப்பம் பிரமாதமாய் நடித்திருக்கிறது! காவல் புதரின் வழியாக அது எட்டி எட்டிப் பார்த்து விட்டுக் கடைசியில் ரோகிதாட்சனைக் கடிக்கும்போது, "ஐயோ!" என்று அலறத் தோன்றுகிறது. அப்புறம் சந்திரமதி அதே புற்றில் கையை வைக்க, அவளைக் கடிக்காமல் பாம்பு அவள் கைமேல் ஊர்ந்து செல்வது ஒரு அற்புதம் என்றே சொல்ல வேண்டும்.

* * *

இந்தப் படம் சம்பந்தமான இன்னொரு அற்புதம் என்னவென்றால், இதன் மொத்த நீளம் 10,950 அடிதான்! அதாவது இரண்டு மணி நேரந்தான் ஓடுகிறது.

சர்க்காரின் யுத்தகாலச் சட்டத்தின்படி தென்னிந்தியாவில் வெளியாகி யிருக்கும் முதலாவது படம் இதுவென்று நினைக்கிறேன். சர்க்காரின் யுத்தச் சட்டங்களுக்குள்ளே மிகவும் நன்மையான சட்டம் இதுவென்று தேசமெங்குமுள்ள அறிவாளிகள் அபிப்பிராயப் பட்டிருக்கிறார்கள். இரண்டு மணி நேரத்துக்குமேல் ஸினிமாக் காட்சி பார்ப்பது ஜனங்களின் சுகாதாரத்துக்கு மிகவும் கேடு; நாளடைவில் கண்ணுக்கு நிச்சயம் தீமை விளைப்பது.

பதினோராயிரம் அடியில் நல்ல படம் எடுக்க முடியாதா? படத்தின் நீளம் குறையக் குறைய 'டெம்போ' அதிகமாகு மென்று ஸினிமா டெக்னிக் தெரிந்தவர்கள் சொல்வார்கள். அதாவது படத்தில் விறு விறுப்பும் சுவாரஸ்யமும் அதிகமாகும் என்பது அவர்களுடைய கட்சி.

6000 அடி நீளமுள்ள சில இங்கிலீஷ் படங்களைப் பார்த்திருக்கிறோம். அவை முடியும்போது, ஏதோ ஒரு ஜீவிய கால மெல்லாம் படம் பார்த்தது போன்ற நிறைவு உணர்ச்சி ஏற்படுகிறது. அலுப்போ, களைப்போ உண்டாவதில்லை. அதே மாதிரியான மனநிறைவு இந்த அரிச்சந்திரா படத்தில் ஏற்படுகிறது; பரிபூரணமாக ஏற்படுகிறது. அவ்வளவு விறுவிறுப்பாகவும், குறைந்த நேரத்தில் அதிகமான சம்பவங்களைப் புகுத்தியும் இந்தப் படத்தை எடுத்திருக்கிறார்கள்.

ஏற்கெனவே, "சபாபதி", "என் மனைவி" ஆகிய உயர்தரப் படங்களைத் தமிழ்நாட்டுக்கு அளித்த பிரகதி பிக்சர்ஸ்காரர்கள்தான் இந்தக் கன்னட "அரிச்சந்திரா"வை எடுத்தவர்கள் என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். தமிழர்கள் பிற பாஷைகளில் இவ்வளவு உயர்தரப் படங்கள் எடுத்து வெற்றியடைவது பற்றிப் பெருமையும் கொள்கிறேன்

கன்னட "அரிச்சந்திரா" ஒரு மகத்தான படம்; பல வழிகளிலும் தென்னாட்டுப் பட உலகுக்கு வழிகாட்டும் படம்.

## பாக்கியலக்ஷ்மி

"வந்தே மாதரம்" என்னும் படத்திற்குப் பிறகு, ஸ்ரீ வி. நாகய்யா எந்தப் படத்தில் நடித்தாலும், அதை நான் பார்க்கத் தவறுவதில்லை. "பக்த போதனா"வில் இவருடைய ஏக சக்ராதிபத்தியமானது அவர் மீது எனக்கிருந்த மதிப்பைப் பன்மடங்கு அதிகமாக்கி யிருந்தது. அப்படிப்பட்ட நடிகரின் "பாக்கிய லக்ஷ்மி"யை நான் எப்படிப் பார்க்காமல் இருக்கமுடியும்?



வேறு பாஷைப் படங்களைப் பார்க்கப் போகும்போது முன்னால் கதையைத் தெரிந்து கொண்டு போனால்தான் படம் பார்க்க சௌகரியமா யிருக்கிறது. அவ்விதமே "பாக்கிய லக்ஷ்மி" கதையை நான் தெரிந்துகொள்ள முயன்ற போது ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. சாதாரணமாய் டாக்கிக் கதைகளில் வீர புருஷர்கள், நிர காரிமணிகள், பொல்லாத 'வில்லன்'கள் — இப்படிப் பட்டவர்களே பிரதான பாத்திரங்களா யிருப்பார்கள். இந்த "பாக்கிய லக்ஷ்மி" கதையிலோ எல்லாப் பாத்திரங்களும் பொறுக்கி எடுத்த அசடுகள்! புத்திசாலித்தனமாகக் காரியம் செய்கிற





விஷயத்தில், — பாவம்! — அவ்வளவு பெரும் நிர்த்தோஷிகள்!

கதையைத் திரையிலே பார்த்தபோதும் மேற்படி அபிப்பிராயம் உறுதி அடைந்தது. அதாவது, பாத்திரங்கள் எல்லாரும் அசடுகள்தான்! — ஆனால், ரொம்பவும் கெட்டிக்கார அசடுகள்! அவர்களுடைய சர்வ அசட்டுத்தனமான காரியங்களுக்கும் நடிப்புத் திறமையினால் மெருகு பூசி, கடைசி வரையில் நம்மை இருந்து பார்த்துவிட்டுப் போகும்படி செய்கிறார்கள் அல்லவா?

முதல் காட்சியில், ஸ்ரீ வி. நாகையாவை சுமார் இருபது வயதுள்ள இளம் பிள்ளையாகப் பார்க்கிறோம். "என்ன திறமையான வேஷ அமைப்பு!" என்று ஆச்சரியப்படும்போது ஸ்ரீ நாகையாவிடமும், படத்தின் பேரிலேயுங்கூட, நல்ல அபிப்பிராயம் விழுந்து விடுகிறது. பின்னால் கதா பாத்திரங்கள் என்னவெல்லாமோ அர்த்தமற்ற காரியங்கள் செய்த போதிலும் அந்த நல்ல அபிப்பிராயத்தை அசைக்க முடியவில்லை.

உதாரணமாக, கதாநாயகன் (நாகையா) தான் காதலித்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு ஒருவிதப் பிரயத்தனமும் செய்யாமல், அவளுடைய கல்யாணப் பேச்சைக் கேட்டதும், ஊரை விட்டு ஓடுகிறான்! இது சுத்த அசம்பாவிதமாயிருந்த போதிலும் அவன்மேல் "முட்டாள் தடியன்!" என்று அருவருப்புக் கொள்வதற்குப் பதிலாக, "பாவம்! அசட்டுப் பிள்ளை!" என்று அநுதாபந்தான் கொள்கிறோம்.

அப்படித்தான் அந்த அர்த்தமற்ற அசட்டுத் தியாகத்தைச் செய்துவிட்டுப் போகிறான் அல்லவா? வேண்டுமென்று தியாகத்தைச் செய்துவிட்டு அப்புறம் அப்படிப் பைத்தியம் பிடித்தவன்போல் அலைந்து கொண்டிருப்பானேன்? ஏதாவது ஒரு நல்ல காரியத்தில் ஈடுபட்டு மனதை மாற்றிக்கொள்ள முயலலாமல்லவா? இதென்ன சர்வ அசட்டுத்தனம்? — இவ்விதம் நாம் நினைக்கும்போது, அந்த இடிந்த பாழுங் கோவிலிலே அவனைப் பார்க்கிறோம். "ஐயோ! பாவம்!" என்று மறுபடியும் இரக்கம் கொள்கிறோம்.



"போதனா"வில் ஸ்ரீ நாகையா பிரகாசிப்பது எனக்கு ஒரு ஆச்சரியமாகவே இப்போது தோன்றவில்லை. இந்த அசட்டுக் கதையில் நடித்து நமது அநுதாபத்தைப் பெறக் கூடியவர் உண்மையிலேயே மிகச் சிறந்த நடிகராகத்தான் இருக்க வேண்டும்.

மற்ற நடிகர்களும் ஸ்ரீ நாகையாவுக்கு நல்ல உதவி செய்திருக்கிறார்கள். கதாநாயகி "லக்ஷ்மி"யாக நடிக்கும் மாலதி "சுமங்கலி" படத்தைக் காட்டிலும் இதில் இன்னும் நன்றாக ஜொலிக்கிறாள்.

கதா நாயகனின் வளர்ப்புத் தந்தையாக நடித்திருப்பவர் அபாரமான திறமை காட்டியிருக்கிறார். ஆரம்ப முதல் கடைசி வரையில் முதுகுக் கூனல் நிமிராமல் நின்றிருக்கிறாரே, அதற்கே இவருக்குப் பரிசு கொடுக்க வேண்டும். இவருடைய புத்திர சோக நடிப்பானது, ஒரு அறியாப் பாலன் விஷயமாக ஏற்பட்டிருக்குமானால், இன்னும் நன்றாய்ச் சோபித்திருக்கும்.

மொத்தத்தில், "பாக்கிய லக்ஷ்மி" படம் முதல் பாதியில் பரபரவென்று ஓடுவதுடன் நம்மையும் கூட இழுத்துக் கொண்டு போகிறது. பின் பாதியில் — படத்தின் சுவாரஸ்யம் குறையும் சமயத்தில் — ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனும், டி. ஏ. மதுரமும் பிரவேசம் செய்து நம்மைக் கொண்டே போகிறார்கள்!

நமது தமிழ்நாட்டு ஹாஸ்ய தம்பதிகள் இந்தத் தெலுங்குப் படத்தில் நடித்திருக்கிறார்கள் என்னும் செய்தி "பாக்கிய லக்ஷ்மி"யைப் பார்க்கும் ஆவலுக்கு ஒரு முக்கிய தூண்டுகோலாயிருந்தது. இந்தத் தெலுங்குப் படத்தில் அவர்கள் நல்ல பெயர் வாங்காமற் போனால் தமிழ் நாட்டிற்கே அது ஒரு குறைவாக அல்லவா போய்விடும்? அப்படியொன்றும் குறைவு ஏற்படவில்லை. தெலுங்குப் படத்திலும் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் வெளுத்து வாங்கித்தான் இருக்கிறார். எடுக்கும் போதே குளத்தங்கரைப் படிக்கல் கிழியும்படி வெளுத்து வாங்குகிறார்! அப்புறம் ஸ்ரீமதி மதுரத்தின் முதுகையும் வெளுத்து விடுகிறார்!! "பூணாரம் பூண்ட

புதுமைதனைக் கண்டதில்லை" என்ற தமிழ் நாட்டுக் கதை தெரியுமல்லவா? இந்தக் கதையைத்தான் இன்னும் புதுமையான முறையில் தயாரித்து, தமிழ் நாடு — ஆந்திர தேசம் எல்லாம் ஒரே சிரிப்பாய்ச் சிரிக்கும்படி அடிக்கிறார்! கதையில், பூணாரம் பூண்ட புதுமையுடனே திரை விழுந்துவிடுகிறது.

என். எஸ். அதற்கு மேல் ஓர் அங்கம் சேர்த்திருக்கிறார். பொல்லாத மனைவி திருந்திய பிற்பாடு, பழைய விருந்தாளியை மறுபடியும் அழைத்துக் கொண்டு — (இல்லை, —இழுத்துக்கொண்டு) வருகிறான் கிரகஸ்தன். விருந்தாளி நடுங்கிக்கொண்டே வந்து இலையில் உட்காருகிறான். சாதம் பரிமாறினதும், "புலுஸு" என்று கேட்க ஆரம்பித்து, உடனே "ஒத்து ஒத்து" என்று அலறிவிட்டு, வெறும் சாதத்தை அள்ளிப் போட்டுக் கொள்கிறான். அந்தச் சமயத்தில் சீர்திருந்திய மனைவி 'புலுஸு'ச் சட்டியை எடுத்துக் கொண்டு வருகிறாள். உடனே விருந்தாளி எடுக்கிறான் ஓட்டம். இந்தக் காட்சியில் பிரமாதமான நகைச் சுவையுடன் உயர்ந்த கற்பனைத் திறனும் வெளியாகிறது.

இந்த ஹாஸ்யக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்த போது அடிக்கடி எனக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்துகொண்டிருந்தது. "இது தெலுங்குப் படம் அல்லவா? ஆந்திர தேசம் முழுவதிலும் நமது ஆந்திர சகோதரர்கள் இதையெல்லாம் பார்த்துக் குதூகலமாகச் சிரிக்கப் போகிறார்கள் அல்லவா?" என்ற எண்ணம் மிகவும் பெருமையை யளித்தது.

இந்த ஹாஸ்ய தம்பதிகளின் மூலமாக ஆந்திரர் — தமிழர் ஒற்றுமையும் சகோதர பாவமும் கூட வளர்ந்துவிடக் கூடும் என்ற நம்பிக்கை உண்டாயிற்று. இதனாலெல்லாம், படம் பார்க்கும்போது, அடிக்கடி குதூகலமாய்க் கையைத் தட்டி ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தேன்.

இப்போது கூட, மேனகையைக் கையில் குழந்தையுடன் கண்ட விசுவாமித்திரர் போல் என். எஸ். கிருஷ்ணன் பரிச்சென்று நின்ற காட்சியை நினைத்தால், பேனாவை வைத்து விட்டு ஒரு முறை பலமாகக் கையைத் தட்டச் சொல்கிறது!......(சத்தம் காதில் விழுகிறதா?)

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழ்க் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஆர். அபிராம பாரதி, திருக்கடையூர்.

## வட்ட மேஜை

சிம்லா
24—5—43

கொஞ்ச நாளைக்கு முன்பு சாத்தூர் சுப்பிரமணியத்தைப் பற்றி எழுதுகையில் "எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ" என்று எழுதி யிருந்தீரல்லவா? நேற்று தரை மட்டத்திற்கு 7000 அடி உயரத்திற்கு மேலுள்ள இந்த சிம்லா வெனப்படும் கைலயங்கிரியில் சாத்தூரின் கச்சேரி கேட்கக் கூடிய பாக்கியம் கிடைத்தது. நீர் சொல்லிய புற்றிலிருந்து வெளிவந்த பாம்பு சாதாரணப் பாம்பல்லவென்று தெரிய வந்தது. கச்சேரி ஒன்றாங் கிளாஸ்.

முக்கியமாக, சங்கராபரண ராக ஆலாபனையைப் பற்றியும், கல்யாணி ராகத்தில் கையாளப்பட்ட சுருதி பேத முறையைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். சங்கராபரண ராகத்தைப் பற்றிச் சொல்லும்போது, அதில் பாடப்பட்ட பல்லவியைப் பற்றிச் சொல்லாமலிருக்க முடியவில்லை. இதைக் கேளுங்களய்யா!

"சங்கராபரணனை, அழைத் தோடி வாடி, கல்யாணி, தர்பாருக்கு."

பல்லவி அமைப்பு எப்படி?

விசேஷமாய்ப் பாகவதர் இந்தப் பல்லவியில் கையாண்ட பங்கிடுமுறை எனக்குப் பிடித்திருந்தது. ஒவ்வொரு ராகத்திற்கும் ஒரு 'தநினதோம்' கொடுத்து, ஸ்வரம் பாடியது, ரொம்பவும் அற்புதமா யிருந்தது. தோடியில் நிரவல் செய்யும்போது, ஷட்ஜமத்தையும் பஞ்சமத்தையும் தொடாமல் 'கமதநிரிகரி நிதமதமகரிநி' என்று விளாசி விட்டார்.

தென்னாட்டிலிருந்து 2000 மைல் தூரத்தில் காய்ந்து கிடந்த எங்களுக்கு இது உண்மையில் ஓர் இன்னிசை விருந்தாகவே யிருந்தது.



சாத்தூராருக்கு ஒரு சின்ன விண்ணப்பம். தமிழ்க் கீர்த்தனங்கள் பாடும்போது இன்னும் நிறுத்தி அர்த்த புஷ்டியுடன் பாட வேண்டும். 'நீ யிரக் காவிடில்' பாடிய போது, அவர் பட்ட அவசரத்தைப் பார்த்தால், யாரோ மரத்தின் மேல் உட்கார்ந்திருப்பது போலும் கீழே யிறங்கா விட்டால் பல்லை உடைத்து விடுவார் போலும் நினைக்கத் தோன்றியது.

சரியான புள்ளிகளைப் பொறுக்கி அவர்களை ஆதரித்தெழுதும் கொள்கை கொண்ட "கர்நாடக"த்துக்கு வந்தன மளிப்பதுடன் என்னுடைய அதிகப் பிரசங்கத்தை நிறுத்திக் கொள்கிறேன்.

சுப்புடு.

[அதிகப் பிரசங்கம், பலே ஜோர் ஐயா!
—ஆசிரியர்.

இருவரும் வெகு நேரம் வரை பேசாமலே இருந்தனர். பிறகு முதலில் லாவண்யாவே வாயைத் திறந்தாள். "ரமேன் அண்ணா! உன்னை ஒன்று கேட்கிறேன்; ஜெயிலுக்குப் போகச் சுலபமான வழி எது, சொல்லு?" என்றாள்.

# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திர நாத் தாகூர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி

## ஒன்பதாம் அத்தியாயம்
## திரை விலகிற்று!

● குளத்திற்கு அக்கரையில் சால்தா மரத் ...ன் மறைவில் சந்திரன் உதயமாயிற்று. ...லத்தில் இருண்ட நிழல். இக்கரையில் ...ாலைத்தி விருக்ஷத்தின் இளந்தளிர், தயில் ...லைந்த குழந்தையின் கண்ணைப் போல் சிவந் ...திருந்தது. பசும் பொன்னிறமான அதன் ...லர்கள் எழுப்பிய மணம் மூடு பனி படர்வது ...பால் எங்கும் பரவியிருந்தது. ஜாருல் ...ரத்தின் கிளைகளில் அழல்ப் பொறியென ...ளிரும் மின்மினிக் கூட்டம். படித்துறைக்கு ...ணித்தாக உள்ள மேடைமீது அசையாமல் ...ட்கார்ந்திருந்தாள் லாவண்யா. காற்று எங்குமே ...ல்லை; ஓர் இலை கூட அசையவில்லை. ...ளத்து நீர், கருமையான சட்டத்துள் பதித்த ...வெள்ளிப் பளிங்கின் தோற்றத்தை அளித்தது.

பின்னாலிருந்து ஒரு குரல், "வரலாமா?" ...ன்றது.

லாவண்யா இனிமை பயக்கும் குரலில், "வா" ...ன்றாள். ரமேன் லாவண்யாவின் காலடியில் ...ரு துறையின் படிமீது அமர்ந்தான். லாவண்யா ...ரிக் கொண்டே, "ரமேன் அண்ணா, ...ட்காருவதற்கு இதுதானா இடம்? எழுந்து ...மலே வா" என்றாள்.

"தேவதா வர்ணனை எப்போதும் பாதார ...ந்தத்திலிருந்தே ஆரம்பமாக வேண்டும்! ...து தெரியாது போலிருக்கிறது உனக்கு? ...க்கத்தில் இடம் இருந்தால், அப்புறம் உட் ...ார்ந்தால் போகிறது. உன் கையை மட்டும் ...காடு; வெள்ளைக்காரர் பாணியில் உனக்கு ...ந்தனம் செலுத்தப் போகிறேன்" என்றான் ...மேன்.

அவன் எழுந்து நின்று கந்தப் பொடியைக் கொஞ்சம் எடுத்து அவள் தலைமேல் தூவினான்.

"எதற்காக இதெல்லாம்?"

"தெரியாதா என்ன? இன்று ஹோலி பண்டிகையாயிற்றே! உங்கள் பூங்காவைப் பார். ஒவ்வொரு மரக்கிளையிலும் வர்ணத்தின் வெறி. வஸந்த ருதுவின் சாயம் மனிதர் உடலைத் தீண்டுவதில்லை; உள்ளத்தில்தான் படிகிறது! அந்தச் சாயத்தை வெளியே காட்டாமற் போனால், அப்புறம், எ வன மோஹினி! நீ இந்த அசோக வனத்திலேயே விழுந்து கிடக்க வேண்டியதுதான்."

"உனக்குச் சரியாகப் பேச நான் இன்னும் பழகிக் கொள்ளவில்லை. வாக்கு சாதுர்யம் எனக்குப் போதாது."

"வாக்கு சாதுர்யம் உனக்கு அவசியமே இல்லையே. ஆண் பறவைதான் பாடும். உன் போன்ற பேடைப் புள் அந்த இசைக்குச் செவி சாய்த்துக் கம் என்று வீற்றிருப்பதே அதற்குப் பதிலளிப்பதற்குச் சமானமாகும். இனிமேல் உன் பக்கத்தில் அமர எனக்கு இடம் தா."

இப்படிச் சொல்லிக்கொண்டே அவன் அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். இருவரும் வெகு நேரம் வரை பேசாமலே இருந்தனர். பிறகு முதலில் லாவண்யாவே வாயைத் திறந்தாள்.

"ரமேன் அண்ணா! உன்னை ஒன்று கேட்கிறேன்; ஜெயிலுக்குப் போகச் சுலபமான வழி எது, சொல்லு?" என்றாள்.

"ஜெயிலுக்குப் போக வழியா கேட்க வேண்டும்? எத்தனையோ வழிகள். அதுவும் இந்தக் காலத்தில் ஜெயிலுக்குப் போகாமல் இருப்பதற்கான வழியைச் சொல்வதுதான் கடினம். இந்தப் புதுமை யுகத்தில் மாயமான குழலிசை நம் எல்லாரையும் மயக்கி வீட்டைத் துறந்து வெளியே வாவென்று அழைக்கிறதே!"

"நான் விளையாட்டாகச் சொல்லவில்லை; உண்மையில் யோசனை செய்து பார்த்தேன்; அந்த வழியில்தான் எனக்கு விடுதலை."

"உன் மனதை இன்னும் நன்றாகத் திறந்து வெளிப்படையாகச் சொல்லு."

"ஒளிக்காமல் சொல்லிவிடுகிறேன். ஆதித் அண்ணாவின் முகத்தைப் பார்த்தால் உனக்கு எல்லாம் வெளிச்சமாகிவிடும்."

"கொஞ்சம் ஜாடையாகத் தெரிகிறது."

"இன்று பிற்பகல், தனியே வராந்தாவில் உட்கார்ந்திருந்தேன். பூஞ்செடிகளைப் பற்றிச் சித்திரங்கள் கொண்ட 'காட்டலாக்' ஒன்று அமெரிக்காவிலிருந்து வந்திருந்தது. அதைப் புரட்டிக் கொண்டிருந்தேன். வழக்கம்போல் மாலை நாலு மணிக்கெல்லாம் டீ அருந்தியானதும் ஆதித் அண்ணா தோட்ட வேலையைப் பார்வையிட என்னையும் அழைத்துக் கொண்டு போக அங்கே வருவார். இன்று என்னவோ அவர் எதையுமே கவனிக்காமல் வேறு மனத்தவராய்த் திரிவதைக் கவனித்தேன். தோட்டத்தில் ஆட்கள் வேலை செய்வதை நேரில் பார்வையிட்டும் அசட்டையாகவே இருந்தார். நான் இருக்கும் வராந்தாவின் பக்கமாக வருவாரோ வென்று எதிர் பார்த்தேன். ஆனால் அவர் பாதி வழி வந்ததுமே திரும்பிப் போய்விட்டார். எந்த மாதிரியான ஆணவம் நிரம்பிய ஆசாமி அவர்! என்ன கம்பீரமான நடை அவரது! காரியத்தில் கருத்து! சதா சுறு சுறுப்பு. வேலை கறுக்காக வாங்கினாலும், முகத்தில் தவறுகளைப் பொறுத்துக்கொள்ளும் புன்சிரிப்பு.

இத்தகைய மனுஷ்யர் ஏனோ இப்படி மாறிவிட்டார்? அந்த நடையில் ஜோரைக் காணோமே! எதையும் கண்ணும் கருத்துமாய்க் கவனிக்கும் அந்தப் பார்வையின் வசீகரம் எங்கே? மனத்தின் ஆழத்தில் எங்கோ ஒடுங்கிக் கிடப்பதுபோல் தோன்றினார். வெகு நேரம் கழித்தே அவர் என்னை நோக்கி மெதுவாக வந்தார். வேறு தினமாயிருந்தால் தம் கைக்கடியாரத்தைக் காட்டி, 'நாழி ஆகிறதே' என்பார். நானும் எழுந்து அவருடன் செல்வேன். இன்று அதெல்லாம் சொல்லாமல் ஒரு நாற்காலியை என் பக் மாக இழுத்துப் போட்டுக்கொண்டு அதி உட்கார்ந்தார். 'காட்டலாக் பார்க்கிறா என்ன?' என்றார். என் கையிலிருந் காட்டலாக்கை வாங்கிக்கொண்டு பக்கங்க புரட்டலானார். ஆனால் அவர் கருத் அதனுள் ஊன்றி நின்றதாகத் தெரியவில்லை.

நடுவில் திடீரென ஒருதரம் என் முக தையே நோக்கினார் — இனித் தயங் கூடாது; விஷயத்தைச் சொல்லிவி வேண்டுமென்ற பாவனையில். மீண்டும் உட காட்டலாக்கின் ஒரு தாளில் கண்களை இற கிய வண்ணம், 'எவ்வளவு பெரிய நஸ்டார் யம் பூ பார்த்தாயா!' என்றார். கு லில் அலுப்புத் தோன்றிற்று. அப்புற வெகு நேரம் பேச்சே இல்லை. புஸ்தகத்தி பக்கங்களைத் திருப்புவதுதான். சட்டென ஒ முறை என்னை நோக்கினார்; நோக்கியது 'டப்'பென்று புஸ்தகத்தை மூடி என் ம மேல் எறிந்து விட்டுப் போக எழுந்தா 'தோட்டத்தைப் பார்க்கப் போக வே டாமா?' என்றேன். 'இல்லை ஸரளா வெளியே கொஞ்சம் காரியம் இருக்கிறது போக வேண்டும்' என்று சொல்லி, ஆதி அண்ணா அந்த இடத்திலிருந்து வெடுக்கெ எழுந்து போய்விட்டார்."

"ஆதித் அண்ணா உன்னிடம் ஏதோ அந் ரங்கமாய்ப் பேசத்தான் வந்திருக்கவேண்டும். எதுவாக இருக்கலாம்? அனுமானத்தா சொல்லேன்."

"இதைச் சொல்லத்தான் வந்திருப்பார் 'முன்னே ஒரு சமயம் உன் அழகா தோட்டம் அழிந்து போய்விட்டது. இந்த தடவையும் உன் அதிருஷ்டம் இன்னொ தோட்டமும் அழியப் போகிறது!' என்பத குத்தான்."

"அவ்வாறு ஏற்படும் பக்ஷத்தில், ஸரளா ஜெயிலுக்குப் போகவேண்டிய ஸ்வாதீன எனக்கு இல்லாமல் போய்விடும்."

ஸரளா மங்கிய சிரிப்புடன், "நீ யதேச்சை யாகச் செல்லும் வழியில் நான் இடைஞ் லாக நிற்பேனா என்ன? மாட்சிமை தங்கி மன்னர் விசாலமாக அந்த வாயிலைத் திறந் வைத்திருப்பார்" என்றான்.

"காம்பிலிருந்து விண்ட மலர்போல் வழியோரத்தில் விழுந்து கிடக்க, நா கைவிலங்கைக் குலுக்கிக்கொண்டே சிறை நோக்கிச் செல்வது எங்கேயாவது நடக்குமா அப்படி நடக்கவேண்டுமானால் இந்த க்ஷணத்தி லிருந்து இந்த வயதிலேயே நான் பா

சாதுவென்று பெயரெடுக்க வழி தேட வேண்டியதுதான்."

"என்ன செய்யப் போகிறாய் நீ?"

"உன் அசுபக் கிரஹங்களை அறைகூவி அவற்றோடு போர் தொடுப்பேன். உன் ராசி சக்கரத்திலிருந்து அவற்றைத் துரத்தி யடிப்பேன். அதற்குமேல் நீண்ட விடை பெற்றுத் திரை கடலைத் தாண்டிச் செல்வேன்."

"உன்னிடம் எதையுமே மறைக்க முடியவில்லை. சில நாளாக ஒரு விஷயம் என் மனத்துள் எழுந்து கொண்டே இருக்கிறது. இன்று அதை உன்னிடம் கூறி விடுகிறேன்; வேறு விதமாக எண்ணிக் கொள்ளாதே."

"என் மனசிலேயே போட்டு வைப்பேன்."

"இளமையிலிருந்து ஆதித் அண்ணாவும் நானும் ஜோடியாக வளர்ந்தவர்கள். அண்ணன் தங்கை மாதிரியன்று; இரு சகோதரர்கள் எப்படியோ அப்படி. நாங்கள் இருவருமே சேர்ந்து, எங்கள் கையாலேயே மண்ணைத் தோண்டுவோம்; மரங்களை வெட்டுவோம். பெரியம்மாவும் அம்மாவும் ஒருவர் பின் ஒருவராக அடுத்து அடுத்து இரண்டு நாளுக்குள் 'டைபாயிட்'டில் இறந்து போய்விட்டார்கள். அப்போது எனக்கு வயது ஆறே ஆறுதான். அதற்கப்புறம் இரண்டு வருஷத்திற் கெல்லாம் அப்பாவும் காலமானார். பெரியப்பா மட்டும் இருந்தார். அவருடைய கண்ணான தோட்டத்தை நானாவது காப்பாற்றுவேனென்று நம்பி இருந்தார். அதற்காகவே என்னைத் தயார் செய்தார். அவர் யாரையுமே எளிதில் நம்பிவிடுவார். நண்பர்கள் கேட்ட மாத்திரம் பண உதவி செய்வார். கையில் இராதுபோனால் தோட்டத்தையாவது அடகு வைத்துப் பணம் வாங்குவார். கடைசியில் தம் தோட்டத்தை அவர்கள் மீட்பார்களென்றே நம்பியிருந்தார். ஆனால் அவருடைய கடனைத் திருப்பிக் கொடுத்தவர் ஆதித் அண்ணா ஒருவரே. மற்றவர்கள் வாயில் போட்டுக் கொண்டார்கள். இந்த சமாசாரங்களெல்லாம் உனக்கும் கொஞ்சம் கொஞ்சம் தெரிந்திருக்கலாம். இருந்தாலும் முதலே பிடித்து இதைச் சொல்ல எனக்கு ஆவலாயிருக்கிறது."

"கேட்டிருந்தாலும், எனக்குப் புதுசாகவே இருக்கிறது."

"அப்புறம் கடனில் எல்லாச் சொத்தும் மூழ்கி விட்டது. அந்த வெள்ளத்திலிருந்து கொஞ்ச நஞ்ச மிருந்ததை வைத்துக்கொண்டு கரையேறியபோது என் பாக்கியம் ஆதித் அண்ணாவின் பக்கத்திலேயே என்னைக் கொண்டு சேர்ப்பித்தது. முன் இருந்தது போலவே இருவரும் ஒருமித்திருந்தோம் — இரு



...உன் கையை மட்டும் கொடு......

சகோதரர்கள் மாதிரி, இரண்டு ஆருயிர் நண்பர்கள்போல. ஆதித் அண்ணாவிடம் நான் அடைக்கலம் புகுந்தது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு அவருக்கு நான் புகலிடம் கொடுத்ததும் உண்மை. இதை உரக்கச் சொல்வேன். கூச்சங்கொண்டு பின்வாங்குவதற்கு யாதொரு காரணமும் ஏற்படவில்லை. இதற்கு முன்பு நாங்கள் ஒன்றாக இருந்த போது எங்களுக்கு என்ன வயதோ அதே வயதின் குணங்களே இப்பொழுதும் எங்களிடத்தில் இருந்தன. திரும்பிக் கூடின காலத்தில், இப்படியே ஆயுள் இறுதிவரை இணைபிரியாது காலங் கழிக்க எங்களால் முடியுமென்றே தோன்றியது. அதற்கு மேல் என்ன சொல்ல முடியும்?"

"சமாசாரத்தை இன்னும் முடிக்கவில்லையே?"

"திடீரென எனக்கு யௌவனம் வந்திருப்பதைக் கவன மூட்டுவானேன்? அன்று எங்கள் இருவரையுமே களங்கமற்று மறைத்துக் கொண்டிருந்த ஒரு திரை திடீரென ஒரே நொடியில் விலகிப் போய்விட்டது. ரமேன் அண்ணா, நிச்சயமாக உனக்கு இதெல்லாம் தெரிந்திருக்கலாம். உன்னெதிரே எனக்கு ஒளிவு மறைவு என்பதே இல்லை. மன்னி என் மேல் கோபங் கொண்டிருப்பது முதலில் எனக்குப் பெரிய வியப்பாகவே இருந்தது; எனக்குப் புரியவில்லை விஷயம். இத்தனை நாள்வரை என்பேரில் எனக்குக் கவனம் விழவில்லை. மன்னியின் கோபத்தழலின் சுடரில் என் உருவத்தைக் கண்டேன். என்னிடமே நான் அகப்பட்டுக் கொண்டேன். புரிகிறதா நான் சொல்வ தெல்லாம்?"

"இளமைப் பருவத்தில் அமுழ்ந்திக் கிடந்த காதலானது விழித்துக்கொண்டு மேலே வரப் பார்க்கிறது."

"நான் என்ன செய்வது, சொல்லு! என்னையே நான் ஏமாற்றுவது எப்படி?"

என்றதும் ஸரளா ரமேனின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

ரமேன் பேசாமல் இருந்தான். சிறிது நேரம் சென்றதும் அவன், "இங்கே நான் இருக்கிற வரைக்கும் நான் செய்யும் இந்த அநீதம் நீடித்துக்கொண்டே இருக்கும்" என்றான்.

"யாருக்கு அநீதம்?"

"மன்னிக்குத்தான்."

"இதோ பார் ஸரளா! புஸ்தகத்தில்தான் இந்த மாதிரியான பேச்செல்லாம் உண்டு. உங்கள் இருவருடைய நட்போ எத்தனையோ காலமானது; உன் மன்னி அப்போது எங்கே கிடந்தாள்?"

"ரமேன் அண்ணா! என்ன வார்த்தை இது! என் இஷ்டத்தை மாத்திரம் பூர்த்தி செய்து கொள்வதற்கு அவ்வளவு கேவலமானவளா என்ன நான்? ஆதித் அண்ணாவின் நிலைமையை யோசிக்க வேண்டாமா?"

"கட்டாயம் யோசனை பண்ணவேண்டும். உன்னைத் திகைக்கச் செய்யும் இந்தக் கிளர்ச்சி அவருக்கு உண்டாகவில்லையென்று நினைக்கிறாயா?"

"யார் அது, ரமேனா?" எனப் பின்புறமாக ஒரு குரல் கேட்டது.

"ஆமாம், அண்ணா!" என்று ரமேன் தன் இடத்தை விட்டு எழுந்தான்.

"உன் மன்னி உன்னைக் கூப்பிடுகிறாள்; ஆயா வந்து இப்போதுதான் சொல்லிவிட்டுப் போனாள்" என்றான் ஆதித்தியன்.

ரமேன் உடனே போய்விட்டான்: ஸரளாவும் அங்கிருந்து எழுந்து போவதற்கு யத்தனம் செய்தாள்.

(தொடரும்)



★ "ஏன்! ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? உடம்பு சரியாக இல்லையா?" என்று ஜகதா கேட்டாள். "குழந்தையையும் உள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டிவிடும் தந்திரத்தை எப்பொழுது கற்றுக்கொண்டாய்?" என்று அவன் கேட்கவில்லை ........

# ஜக்குதா

"வஸந்தன்"

● வருஷத்துக்கொரு முறை இரண்டு வாரமோ அல்லது மூன்று வாரமோ நடராஜன் தன் மனைவியுடன் நீலகிரிக்கு வந்து தங்குவது வழக்கம். அப்பொழுதெல்லாம் அவர்கள் உலகத்தை மறந்து விட்டுக் குதூகலத்தில் ஆழ்ந்திருப்பார்கள்.

இந்தத் தடவை கூட மலைவாசத்தின் போது என்ன என்ன செய்யவேண்டுமென்று நடராஜன் எவ்வளவோ புரோகிராம் போட்டு வைத்துக் கொண்டிருந்தான். ஆனல் இப்படியெல்லாம் நடக்குமென்று அவன் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லை.

திடீரென்று ஜகதாம்பாள் ஜுரத்தால் படுத்த படுக்கையாகி விட்டாள். அவள் பிழைத்ததே புனர் ஜன்மமாகிவிட்டது. அவள் உயிர் தப்பிப் பிழைத்தது வாஸ்தவந்தான். ஆனல் மிகவும் பலஹீனமாயிருந்தாள். எவ்வளவோ டானிக்குகள் வாங்கிக் கொடுத்துப் பார்த்தும் ஒன்றும் பயனில்லை. அதனல் நடராஜனுக்கு டாக்டர்கள் மீதும் மருந்துகள் மீதும் வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. "இனி மேல் டாக்டர்கள் முகத்திலேயே விழிக்கக் கூடாது" என்ற திடசங்கல்பத்துடன் தான் நடராஜன் ஜகதாவை நீலகிரிக்கு அழைத்து வந்தான்.

"ஜகதா பழையபடி ஆவதற்கு எத்தனை நாள் ஆகும்? அவள் மறுபடியும் வீணையை மீட்டிப் பாடுவதை நான் எப்பொழுது கேட்கப் போகிறேன்" என்று மனவருத்தப்பட்டுக் கொண்டான் நடராஜன்.

● சங்கீதப் பித்து என்று சொல்லும் அளவுக்கு நடராஜனுக்கு சங்கீதத்தில் விசேஷப் பிரியம் இருந்தது. அந்தப் பிரியத்தை அவன் தன் மனைவியிடம் கொண்டிருந்த காதலுக்குத் தான் ஒப்பிடலாம். புதிய புதிய பாட்டுக்கள் இயற்றி அழகான மெட்டுக்கள் அமைத்து ஜகதாவுக்குச் சொல்லிக் கொடுப்பான். ஜகதா வீணையை மீட்டிப் பாடும்போது நடராஜனும் கூடவே பாடுவான். எப்போதையும் விட, அவர்கள் நீலகிரியில் மலைப்பாறையருகில் உட்கார்ந்து பாடும்போதுதான் அவர்களுக்கு அளவு கடந்த உத்சாகம்! அந்தச் சமயங்களில் தங்களை மறந்து போயிருப்பார்கள். ஆனல், மறுபடியும் அப்படியெல்லாம் சந்தோஷமாக இருக்க முடியுமா? — இந்தக் கேள்விதான் இப்பொழுது நடராஜன் மனத்தை வாட்டிக் கொண்டிருந்தது.

"டாக்டர் முகத்திலேயே விழிக்கக் கூடாது" என்று நடராஜன் பிரதிக்ஞை செய்து கொண்டு வந்தானல்லவா? விதியே அவனைப் பார்த்துப் பரிகசிப்பது போல், அவன் நீலகிரிக்கு வந்த மறு நாள் ஒரு சம்பவம் நடந்தது. அன்று சாயங்காலம் அவன் ஜகதாவைக் காரில் ஏற்றிக் கொண்டு சற்று தூரம் சென்று வரப் புறப்பட்டான். சிறிது தூரம் சென்றதும் அந்த மோட்டார் 'டமேர்' என்ற பயங்கர சத்தத்துடன் ஒரு வீட்டு வாசலுக்கு எதிரில் நின்று போயிற்று. அதுவும் அந்த வீட்டு வாசலில் 'டாக்டர் சிந்தாமணி, எம். டி' என்று போர்டு தொங்கிக் கொண்டிருந்தது மிகவும் வேடிக்கையான விஷயமேயல்லவா? வாசலில் எங்கேயாவது குண்டு விழுந்து விட்டதோ என்று பார்ப்பதற்காக வீட்டுக்குள்ளிருந்த டாக்டர் வெளியே வந்தார். அங்கே வந்ததுந்தான் மோட்டார் டயர் வெடித்துக் கார் நின்று கொண்டிருப்பதையும், அந்த அதிர்ச்சி தாங்காமல் ஜகதா மோட்டாருக்குள்ளேயே மயங்கி விழுந்திருப்பதையும் பார்த்தார்.

"ஸார்! இந்த வீட்டில் இருக்கும் டாக்டர் நீங்கள்தானே! கொஞ்சம் இவளைப் பாருங்களேன்!" என்று நடராஜன் கெஞ்சினன். டாக்டர் ஜகதாவை 'ஸ்டெர்ட்ச'ரில் வைத்து பங்களாவுக்குள் கொண்டு போனர்.

மேற்படி சம்பவம் நடந்த ஒரு மாதத்திற்கெல்லாம், ஜகதாவைப பார்த்தோமானல் நம்மால் அடையாளம் கண்டு பிடிக்க முடியாது. அவ்வளவு மாறிப் போயிருந்தாள்! முன்னைக் காட்டிலும் அவள் அதிக சோபையுடன் விளங்



னுள். வஸந்தகாலத்தின் புத்துயிர் பெற்ற ரோஜா மலர் மாதிரி இருந்தாள்.

சாதாரணமாக இருந்தால், ஜகதா வைக் குணப்படுத்திய டாக்டர் சிந்தா மணிக்கு நன்றி செலுத்துவதற்காக நடராஜன் தன் உயிரையே வேண்டு மானாலும் கொடுத்திருப்பான். ஆனால் அதற்குப் பதிலாக இப்பொழுது டாக்ட ரின் உயிரையே வாங்கி விடலாமா என்ற ஆசைகூட அவனுக்கு உண்டாகி விட்டது.

நடராஜன் இப்படி ஆசை கொள்வ தற்கு டாக்டர் கொஞ்சமும் பொறுப் பாளி இல்லை என்றாலும், ஜகதா முற்றும் பொறுப்பாளியாக இருந்தாள் என்பதை இங்கே சொல்லிவிட வேண் டும். நீலகிரிக்கு வந்த சில தினங்களி லிருந்து அவள் தன் கணவனிடம் ஒரு மாதிரியாக நடந்து கொள்ள ஆரம்பித் தாள். முந்தியெல்லாம் கணவனிடம் குழைந்து குழைந்து பேச வருவா ளல்லவா? இப்பொழுது மட்டும் அவள் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் தனி யாக அறைக்குள் போய்க் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொள்வானேன்?

தான் வெளியில் போயிருக்கும் சமயங் களில் ஜகதா அடிக்கடி டாக்டர் வீட்டுக்குப் போவதாகத் தெரிந்து கொண்டதும் நடராஜனுக்கு உண்டான கோபமும் ஆத்திரமும் இவ்வளவு அவ்வளவு இல்லை. அந்த டாக்டர் ஜகதாவுடன் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர் என்று தெரிந்துகொண்டதும அவன் மனதில் பெரிய போராட்டம் ஏற்படலாயிற்று. 'சீ, சீ! நான் யாரைப் பற்றி இப்படி எண்ணுகிறேன்? என் அருமை ஜகதாவைப் பற்றியா?'' என் றெல்லாம் அவன் மனதில் கேள்விகள் எழும்பும்.

"உடம்புதான் சரியாகி விட்டதே! எதற்காக முகத்தை இப்படி வைத்துக் கொள்கிருய்?" என்று அவன் ஒரு நாள் தன் மனைவியைக் கேட்டு விட்டான்.

"நீங்கள் ஏன் இன்னும் சாப்பிட வில்லை?" என்று புன்சிரிப்புடன் பதில் கேள்வி கேட்டாள் ஜகதா.

"நான் சாப்பிடவில்லை என்றுதான் இவ்வளவு நாளாக இப்படி முகத்தை வைத்துக் கொண்டிருக் கிருயோ?" என்றான் நடராஜன்.

"நான் வந்து சாதம் போடட்டுமா?" என்றாள் ஜகதா.

அவள் சாமர்த்தியமாகப் பேச்சை மாற்றுகிறாள் என்று தெரிந்துகொண் டான் நடராஜன்.

"வேண்டாம்! போய்ப் படுத்துக் கொள்! வெளியில் வந்தால் உடம்பை வலிக்கும்!" என்று சொல்லிவிட்டுச் சாப்பிடப் போனான் நடராஜன். ஆனால் அவனுக்குச் சோறே வேண்டியிருக்க வில்லை.

● மனோகரமான மாலை வேளை. தென்றல் காற்றும், குளு குளுப்பும் நடராஜனின் மனக் கொதிப்பை அடக்கிச் சாந்தியைக் கொடுத்தன. ஜகதா மெதுவாகக் கணவன் அருகில் வந்து நின்றாள். தான் கோபித்துக் கொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டு 'தாஜா' பண்ண வருகிறாள் என்று எண்ணினான்.

"ஏன்! ஒரு மாதிரியாக இருக்கிறீர் கள்? உடம்பு சரியாக இல்லையா?" என்று ஜகதாம்பாள் கேட்டாள்.

"குழந்தையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டிவிடும் தந்திரத்தை எப்பொழுது கற்றுக் கொண்டாய்?" என்று அவன் கேட்கவில்லை. வாயை மூடிக்கொண்டு பேசாமல் இருந்தான்.

"உடம்பு சரியாக இல்லையென்றால் டாக்டரிடம் காண்பியுங்களேன்" என்று மறுபடியும் கேட்டாள் ஜகதா.

"ஆமாம்; நல்ல விஷமாகக் கொடுத்து என்னைக் கொல்லட்டும்; நான் ஒருவன் நடுவில் இடைஞ்சலாக எதற்கு இருக்கிறேன்?" என்று அவன் நல்ல வேளையாகக் கேட்டு விடவில்லை.

"ஏன்? என்னோடு பேசவே மாட்டீர் களா?" என்று கேட்டாள் ஜகதா.

நடராஜன் அவளை மௌனமாகத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய மாசு மறுவற்ற புனிதமான முகத்தைப் பார்த்ததும், "முகத்தைக் கண்டு ஏமா றாதே!" என்று சொன்னவன் வாயில் சர்க்கரையை அள்ளிப் போடவேண்டும் என்று அவனுக்குத் தோன்றிற்று.

"இவள்தான் எவ்வளவு அழகாக நடிக்கிறாள்! இவள் நடிப்பு எவ்வளவு

ஆரத்துக்குத்தான் போகிற தென்று பார்த்துவிடுவோம்" என்று நிர்மா னித்தான்.

"ஜகதா! நாம் முன்பெல்லாம் அதோ அந்த மலைப் பாறையில் உட்கார்ந்து பாடுவோமே, அங்கே கொஞ்ச காமிகை போய்விட்டு வரலாம். வீணையை எடு!" என்றான்.

ஜகதா வீணையை எடுத்துவரப் பிரியம் கொள்ளாதவள் போல் பேசாமல் நின்று கொண்டிருந்தாள். நடராஜன் தானே வீணையை எடுத்து மோட்டாரில் கொண்டு போய் வைத்து அவளை ஏறிக் கொள்ளச் சொன்னான்.

● சிறிது நேரத்திற்கெல்லாம் காட்டின் அமைதியைப் பிளந்து கொண்டு சங்கீதம் கேட்க ஆரம்பித்தது. நடராஜன் மலைப் பாறையில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்க, ஜகதா அருகில் உட்கார்ந்து வீணையை மீட்டிக் கொண்டிருந்தாள். நடராஜனின் இழைந்த சாரீரம் மேல் ஸ்தாயியில் 'ஜம்'மென்று ஏறி சங்கதிகளை உதிர்த்துவிட்டுக் கீழே இறங்கிற்று. அவன் பாடிக் கொண்டிருந்தானே தவிர அவன் கவனம் பூராவும் ஜகதாவின் மேலேயே இருந்தது. அவள் எப்படி வீணை வாசிக்கிறாள்?

சுவாரஸ்ய மில்லாமல், சிரத்தை யில்லாமல் அவள் விரல்கள் வீணைத் தந்திகளில் அலைந்து கொண்டிருந்தன. நடராஜன் பாட்டுடன் அவள் ஒரு இடத்தில்கூட ஒன்று சேர்ந்து வாசிக்கவில்லை. நடராஜனுக்கு எல்லாம் விளங்கி விட்டது! நடிப்பதைக் கூடச் சரியாக நடிக்க முடியாத அளவுக்கு அவள் தன் மனதை எங்கேயோ, யாரிடத்திலோ வைத்து மறந்து வந்துவிட்டாள் என்பது நிச்சயமாகத் தெரிந்து போயிற்று.

நடராஜன் பாடுவதை நிறுத்தி விட்டான்.

"ஜகதா!" என்று கரகரப்பான குரலில் கூப்பிட்டான். ஜகதா நிமிர்ந்து கூடப் பார்க்காமல் வீணையை மீட்டிக் கொண்டிருந்தாள்.

புருஷன் கூப்பிடுவதைக் கூடக் கேட்காமல் யாராவது இவ்வளவு அழுத்தமாக இருப்பார்களா? "ஜகதா!" என்று சற்றுக் கடுமையான குரலில் கூப்பிட்டான் நடராஜன்.

ஜகதாம்பாள் சட்டென்று திரும்பிப் பார்த்தாள்; நடராஜன் பரபரப்படைந்திருந்ததைக் கண்டு கொண்டுவிட்டாள். "உடம்பெல்லாம் ஏனோ வலிக்கிறது!" என்றாள்.

ஜகதா நிலைமையைச் சமாளித்துக் கொள்வதற்காகச் சாக்குப் போக்குச் சொல்கிறாள் என்பதை நடராஜன் உணர்ந்தான். வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு பிரும்மஹத்தி பிடித்தாற் போல் உட்கார்ந்திருந்தான்.

'கேட்டு விடுவோமா? கேட்டுவிடுவோமா?' என்று அவன் மனம் தவித்தது. அதே சமயத்தில் ஜகதாவும் அண்ணாந்து பார்த்து விட்டாள். 'சொல்லி விடுவோமா?' 'சொல்லி விடுவோமா?' என்று அவள் உதடுகள் துடிப்பதுபோல் இருந்தன.

"இனிமேல் ஒளிக்க முடியாது. சொல்லிவிடுகிறேன். நான் ... நான் ..." என்று அவள் தடுமாறினாள்.

நடராஜன் முகத்தில் ஈயாடவில்லை. அவன் உடல் பற்றி எரிந்து விடும் போல் இருந்தது. பெரிய திருக்கோயில் களிலுள்ள கருங்கல் விக்ரஹத்தை அங்கே பெயர்த்து வைத்தது மாதிரி அவன் உட்கார்ந்திருந்தான்.

"நீங்கள் எங்கே சந்தேகித்துவிடப் போகிறீர்களோ என்று பயந்து கொண்டே இருந்தேன். எல்லாவற்றையும் தான் தெரிந்து கொண்டு விட்டீர்களே?"

"எதை?"

"நிஜமாகக் கேட்கிறேன்........."

நடராஜன் திரும்பி அவளைப் பார்த்தான். கருங்கல் மாதிரி இருந்த முகத்தில் திடீரென்று சலனம் உண்டாயிற்று. பளிரென்று அவன் மனதில் ஒரு சந்தேகம் தோன்றிற்று.

"ஜகதா! நான் ஒன்று கேட்கிறேன்; நீ ஒன்று சொல்கிறாயே! உனக்குக் காது கேட்க வில்லையா?" என்று அத்தனை நாளாய் அவனிடம் பிடிபடா



மல் இருந்த சூக்ஷ்மத்தைக் கண்டு பிடித்து விட்டவன்போல் உரத்த குரலில் கேட்டான்.

"ஆமாம்" என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டி, குபீரென்று அழுகையை பொத்துக்கொண்டு வர ஜகதா கணவன் மடியில் விழுந்துவிட்டாள்.

"அதை அப்பொழுதே சொல்லியிருக்கக் கூடாதா? அட பைத்தியமே! ஜுரத்தால் காது செவிடாய்ப் போய் விட்டால் அது உன் மேல் குற்றமா? எவ்வளவு அனுவசியமான சந்தேகங்களுக்கு இடம் கொடுத்து விட்டாய்? இதற்காகத்தான் டாக்டர் வீட்டுக்கு அடிக்கடி போய் விட்டு வந்தாயா?" என்று நடராஜன் ஆறுதலுடன் கேட்டான்.

"சில பேர் அவர்களுடைய அகத்துக்காரிகள் காது செவிடாயிருந்தாலும் பொருட்படுத்த மாட்டார்கள். சிலர் அகத்துக்காரிகள் ஊமையாகவே போக வேண்டும் என்று பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருப்பார்கள். ஆனால், நான் நிஜத்தைச் சொன்னால் உங்கள் அன்பை இழந்து விடுவேனோவென்று நினைத்தேன். சதா சர்வ காலமும், ஒவ்வொரு வினாடியும், பாட்டு, பாட்டு, என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே, உங்கள் பாட்டை ரஸிப்பதற்கு எனக்கு சக்தியில்லை: கூடப் பாடுவதற்கு யோக்யதை இல்லை — என்று தெரிந்து கொண்டால் உங்கள் மனசு எப்படி மாறுமோ என்று பயந்தேன்."

"நன்றாயிருக்கிறது, அசட்டுத்தனம்" என்று அவன் அவளை அன்புடன் கடிந்தான்.

● ஆனால் இது நடந்த பதினைந்து தினங்களுக்கெல்லாம், அதே யிடத்தில் நடராஜனையும் ஜகதாவையும் சந்திக்கிறோம். தாம்பத்யப் பேச்சுகளை நாம் அதிக நேரம் ஒட்டுக் கேட்கக் கூடாதாகையால், சிறிது தலையை நீட்டி வைக்கலாம். நடராஜன் ஏதோ முணுமுணுத்து விட்டு "நான் என்ன சொன்னேன். சொல், பார்க்கலாம்?" என்று கேட்கிறான்.

ஜகதாவும் ஏதோ முணு முணுத்து விட்டு "இப்பொழுது என்ன சொன்னேன்?" என்று கேட்கிறாள்.

"ஓஹோ! எனக்குக் காது கேட்கிறதா என்று நீ என்னைப் பரிசோதிக்கிறாயோ? பேஷ்!" என்று ஜகதாவை கட்டிப் பிடிக்கிறான் நடராஜன்.

இதற்கு மேல் அங்கே நமக்கு என்ன வேலை?

*அரை நிமிஷக் கதை*

# காளிங்க நர்த்தனம்

**"பகீரதன்"**

● ஹாஸ்டலுக்குப் புதிதாக ஒரு மாணவன் வந்து சேர்ந்தான். அவன் 'ஸூட்'டையும் 'ஹாட்'டையும் பார்த்தால், ஆசாமி அசல் வெள்ளைக்காரன் மாதிரி இருப்பான். நிறத்தில் மட்டும் சிறிது வித்தியாசம் இல்லாமலிருந்திருந்தால் அவன் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்று வீடு மனைகள் கூட வாங்கியிருக்கலாம்போல் தோன்றியது. அவன் பேசுவதோ எப்போதும் இங்கிலீஷ்; பெயரோ ஆர். கே. பிரான்! அவன் யார், என்ன ஜாதி, தமிழனா, வங்காளியா, பார்ஸியா, பறங்கிக்காரனா என்று கேட்டால் அவன் ஒரு தகவலும் சொல்வதில்லை.

"அவன் எந்த இனத்தைச் சேர்ந்தவனாயிருந்தால்தான் என்ன?" என்று எங்களால் சும்மா இருக்கவும் முடியவில்லை. ஹாஸ்டல் வாசிகளாயிருந்த எங்களுக்கு ஊரிலிருந்து பணந்தான் அனுப்பிக் கொண்டிருந்தார்கள்; வம்பை யாரும் அனுப்பி வைக்கவில்லை. அதனால்தான் நாங்கள் பொழுது போக்குவதற்காக அதை விலை கொடுத்து வாங்க வேண்டியிருந்தது!

அவனைப் பற்றிய உண்மையை எப்படிக் கண்டு பிடிப்பதென்று பலவிதத்தில் யோசனை செய்து பார்த்தோம். ஒன்றும் தோன்றவில்லை. ஒரு நாள் நாணு, "அதற்கு நான் வழி கண்டு பிடித்து விட்டேன். இன்றிரவு அவன் எந்த இனத்தைச் சேர்ந்தவன் என்று தெரிந்து விடுகிறது, பாருங்கள்" என்றான்.

"எப்படியடா தெரியும்" என்று நாங்கள் ஆவலுடன் கேட்டோம். ஆனால் அவன், "அதெல்லாம் பரம ரகசியம். சொல்ல முடியாது" என்று கூறிவிட்டான்.

● நாங்களும் அன்றைய இரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். மணி பன்னிரண்டு இருக்கும். "ஐயையோ! பாம்பு, பாம்பு!" என்று சத்தம் கேட்டது. நாங்கள் அறையை விட்டு ஓடிவந்து பார்த்தோம். கத்தியது யாருமில்லை. ஆர். கே. பிரான்தான் அப்படி உளறியடித்துக் கொண்டு ஓடி வந்தான்.

"அட, நீ தமிழன்தானா?" என்று நாங்கள் ஆச்சரியத்துடன் கேட்டோம்.

அப்பொழுது நாணு, "பிரான், பயப்படாதே! இதோ பாரு, பாம்பை!" என்று ஒரு ரப்பர் பாம்பை எடுத்துக்கொண்டு வந்து அவன் எதிரில் போட்டான்.

அதைப் பார்த்து ஆர். கே. பிரான்கூடச் சிரித்துவிட்டான்.

"இதற்கா இப்படி உளறியடித்துக் கொண்டு ஓடி வந்தாய்!" என்றேன் நான்.

"ஆமாம், காளிங்க நர்த்தனம் செய்த கண்ணபிரானல்லவா நான்!" என் தமிழில் சொல்லிச் சிரித்தான் அவன்.

அப்பொழுதுதான் எங்களுக்கு அவனுடைய முழுப் பெயர் ஆர். கண்ணபிரான் என்று தெரிந்தது!

# தமிழ் வளர்ந்த கதை

பி. ஸ்ரீ.

## 6. தொல்காப்பியரும் தமிழ் வளர்ச்சியும்

இந்தியாவில் வழங்கும் வேறு எந்த மொழிக்கும் தொல்காப்பியம் போன்ற ஒரு பழமையான இலக்கணம் கிடையாது. உதாரணமாகக் கன்னட மொழியின் முதலாவது இலக்கணம் சுமார் 800 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது; தெலுங்கு மொழியின் முதலாவது இலக்கணம் சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்புதான் பிறந்தது. தொல்காபபியத்தின் வயதோ சுமார் இரண்டாயிரம் என்கிறார்கள். அவ்வளவு பழமையான காலத்திலும் தொல்காப்பியர், தமக்கும் பழமையாக இருந்த நூல்களை ஆராய்ந்து * தொல்காப்பியத்தை இயற்றினார். தமிழ் மொழியின் வயதைக் கணிக்க முடியாது, இதன் ஜாதகக் குறிப்பு அகப்படவில்லை யென்றுதான், தமிழை "ஆதிசிவன் பெற்று விட்டான்!" என்று சொல்லி விட்டார்கள் போலும்.

## செயல் மறத்தல்!

அந்தப் பழம் பொருளாகிய பரம் பொருளோடு தமிழ் மொழியை ஒப்பிடவும் துணிந்தார் மனோன்மணீய ஆசிரியர். பல உயிர்களையும் உலகங்களையும் பரம் பொருள் படைத்து விட்டதல்லவா? தமிழும், மலையாளம் முதலான பாஷைகளைப் படைத்து விட்டதாம். வேறு பாஷைகளைப் படைத்து விட்டு உலக வழக்கத்திலிருந்து மறைந்து போன ஸம்ஸ்கிருதம் போல் தமிழ் அழிந்து போகவில்லையாம்: அழியாமலே இருக்கிறதாம் பரம்பொருள் போலவே.

பல்லுயிரும் பலஉலகும்
  படைத்தளித்துத் துடைக்கினும், ஓர்

எல்லையறு பரம்பொருள்முன்
  இருந்தபடி யிருப்பதுபோல்

[பல் உயிரும்-பல உயிர்களையும். அளித்து-காப்பாற்றி. துடைக்கினும் - அழித்து வந்த போதிலும். எல்லையறு - எல்லை இல்லாத.]

இருக்கிறது எங்கள் தமிழ் மொழி என்று வருணித்து விட்டு ஆசிரியர், அப்படிப் பட்ட தமிழ் மொழியின்,

சீரிளமைத் திறம்வியந்து
  செயல்மறந்து வாழ்த்துதுமே!

[சீர் இளமை - சிறப்பான இளமை. வாழ்த்துதும் - வாழ்த்துவோம்.]

என்று வாயார வாழ்த்துகிறார்.

ஆசிரியர் சுந்தரம் பிள்ளை தமிழின்பத்திலே செயல் மறந்து பரவசமாகிறார். வேறு சிலரோ, தமிழ் வளர்ச்சிக்கு உரிய செயல்களையும் மறந்து சும்மா வாழ்த்திக் கொண்டே யிருக்கிறார்கள்! 'பரம் பொருள்' போல் 'இருந்தபடி யிருப்பது' ஒரு பாஷைக்கு நல்லதா? —என்று யோசிக்கவும் மறந்து போகிறார்கள். பாஷை வளர வேண்டாமா? உயிர் இருப்பதற்கு அடையாளம் ஓங்கி வளர்வதுதானே? வளர்ச்சி என்றால் எத்தனையோ மாறுதல்களும் ஏற்படத் தானே செய்யும்? பாஷையின் வளர்ச்சிக்கும், காலத்திற்கேற்ற மாறுதல்களுக்கும் பாஷையைப் பயின்று கொண்டிருக்கும் அறிவாளிகளும், எழுத்தாளர்களும், இலக்கணப் புலவர்களும் இடம் கொடுத்துக் கொண்டே போக வேண்டும் அல்லவா? அந்தத் துறையிலே அவர்களுடைய முயற்சிகளும் செயல்களும் சென்று கொண்டுதானே இருக்க வேண்டும்? 'செயல் மறந்து' 'முன் இருந்தபடி (வளர்ச்சி இல்லாமல்) இருப்பது' தான் எங்கள் தெய்வத் தாய் மொழிக்கு அழகு— என்று 'வியந்து' கொண்டிருந்தால் போதுமா?

தமிழ் இருந்தபடி இருக்கலாகாது. வளர்ந்து கொண்டே போக வேண்டும் என்பதுதான் மனோன்மணீய ஆசிரியரின் கருத்து—கவலை—கனவு! அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு, அந்தப் பாட்டைப் பாடிக்கொண்டு, தமிழின் வளர்ச்சியைத் தடுக்கலாகாது—என்பது தான் இங்கே நான் சொல்ல விரும்வதெல்லாம். தொல்காப்பியர் காலம்

---

* இது தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரத்திலிருந்தே தெரிகிறது.

தொட்டுத் தமிழ் வளர்ந்து கொண்டு தான் வருகிறது. அப்படி வளர்ந்து வர வேண்டும் என்பது தொல்காப்பியருக்கும் உடன்பாடுதான்.

### திசைச் சொற்கள்

தமிழில் தமிழ்ச் சொற்களோடு ஸம்ஸ்கிருதச் சொற்களும் இசைந்து கலந்து தமிழை வளர்க்கலாம் என்பது தொல்காப்பியர் அபிப்பிராயம் அல்லவா? அவர் திசைச் சொற்கள் என்ற சொற்களைக் குறித்தும் பிரஸ்தாபிக்கிறார். அந்தச் சொற்கள் எவை?

"செந்தமிழ் சேர்ந்த
பன்னிரு நிலத்தினும்

தம்குறிப் பினவே
திசைச்சொற் கிளவி

[நிலத்தின் : நிலத்தின் பிரிவுகளாகிய நாடுகளிலும்; தம் குறிப்பினவே : தம் தம் நாட்டில் அறிந்து வழங்குவன; கிளவி : பேச்சு.]

என்பது திசைச் சொல்லைக் குறிக்கும் தொல்காப்பியச் சூத்திரம்.

இந்தச் சூத்திரத்திலே "செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்" என்பதற்குப் பொருள் என்ன? "செந்தமிழ் மொழி வழங்கும் தமிழ் நாட்டின் பகுதிகளாகிய பன்னிரண்டு நிலம் அல்லது பிரிவுகள்" என்பது சாதாரணமாகச் சொல்லப்படும் பொருள்.

உதாரணமாக, செட்டிமார் நாட்டில் ஒரு குழந்தையின் முதலாவது பிறந்த நாள் விழாவைப் புதுமை என்கிறார்கள். தமிழ்நாடாயிருந்து பிற்காலத்தில் மலையாளமாகி விட்ட பிரதேசங்களில் தந்தையை அச்சன் என்கிறார்கள்; நல்ல நீரை வெள்ளம் என்கிறார்கள். இப்படித் தமிழ்நாட்டின் பகுதிகளாகப் பல திசைகளிலும் இருந்த பன்னிரண்டு நிலங்கள் அல்லது பிரதேசங்களிலும் தனியாக ஜனங்கள் தெரிந்து வழங்கி வந்த மொழிகளையே தொல்காப்பியர் திசைச் சொற்கள் என்று குறிப்பிட்டிருக்கலாம்—என்பது சாதாரண அபிப்பிராயம்.

ஆனால் பரதேச மொழிகள் அல்லது பிறநாட்டுச் சொற்களும் திசைச் சொற்களில் அடங்கவேண்டும் என்பது உரையாசிரியரான தெய்வச் சிலையாரின் அபிப்பிராயம். "செந்தமிழ் சேர்ந்த பன்னிரண்டு நிலங்களும் பிறநாடுகள்" ர்கிறார் தெய்வச்சிலையார். அதாவது அக் காலத் தமிழர்கள் வியாபாரம் முதலான காரணங்களால் பிற நாடுகளுடன் கலந்து உறவாடியிருப்பார்கள்

அல்லவா? அப்போது தமிழ் மொழியும் அந்தப் பிறநாட்டுச் சொற்களோடு கலந்து உறவாடத்தானே செய்யும்? அப்படித் தமிழிலே புகுந்து வழங்கும் அந்தப் பிறநாட்டுச் சொற்களைத் திசைச் சொற்கள் என்கிறார் தெய்வச் சிலையார். அந்தப் பன்னிரண்டு பிறநாடுகளும் சிங்களம் (இலங்கை) முதலியன என்று அபிப்பிராயப்படுகிறார்.

## பொருள் வாணிபமும் சொல் வாணிபமும்

**ப**ழைய காலத்திலேயே தமிழ் மக்கள் பல திசைகளில் உள்ள நாடுகளுக்கும் தரை வழியாகவும், கடல் வழியாகவும் தைரியமாகச் சென்றார்கள். பொருள் – வாணிபத்தோடு அறிவு – வாணிபமும் செய்தார்கள்; பண்டங்களை மாற்றிக் கொண்டதோடு கருத்துக்களையும் மாற்றிக் கொண்டுதான் இருக்க வேண்டும். தொல்காப்பியர் காலத்திலும் கீழ் நாடுகளுக்கும் மேல் நாடுகளுக்கும் தமிழர்களுடைய கப்பல்கள் போய் வந்தன என்று ஊகிக்கலாம். கி. பி. முதலாவது இரண்டாவது நூற்றாண்டுகளிலே தமிழ் நாட்டின் துறை முகங்களில் கிழக்கேயிருந்தும் மேற்கே தொலை தூரத்திலிருந்தும் பிறநாட்டுக் கப்பல்கள் வியாபாரத்திற்காக வந்து கொண்டிருந்தன என்றும், அக்காலத்தில் அந்த வியாபாரம் மும்முரமாயிருந்ததென்றும் பழைய கிரேக்க ஆசிரியர்களும் ரோமன் ஆசிரியர்களும் எழுதி வைத்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட வியாபார சம்பந்தங்களால், தமிழ்ச் சொற்களும் கடல் கடந்து பிறபாஷைகளில் குடியேறிவிட்டன. தாராளமாக, 'அரிசி' என்ற தமிழ்ச் சொல் கிரேக்க பாஷையோடு இசைந்து கலந்து விட்டது. தோகை, அகில் என்ற தமிழ்ச் சொற்கள் ஹீப்ரு பாஷையோடு உறவாடிக் கலந்து கொண்டன. இப்படியே அந்தப் பாஷைகளிலுள்ள சொற்களும் தமிழோடு இசைந்து கலந்திருக்கத்தானே வேண்டும்?

## வடமொழியும் பிறமொழிகளும்

**வ**ட சொற்களை மற்றத் திசைச் சொற்களோடு சேர்த்து விடவில்லை. அந்தச் சொற்களுக்கு ஒரு தனி மதிப்பு. வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் பொது மொழி என்றே வடமொழியை மதித்தார்கள். மண்ணுலகத்தோடு விண்ணுலகத்திற்கும் அது பொது மொழி யென்று தமிழ் உரையாசிரியர் ஒருவர் சொல்லுகிறார்! அதுபோகட்டும்: வடமொழிக் கலப்பால் தமிழ் புத்துயிர் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்தது என்பது நிச்சயம்.

பிற்காலத்திலே அரபி, பார்ஸி, உர்து முதலான பாஷைகளிலிருந்தும் திசைச் சொற்கள் தமிழில் வந்து கலந்த வண்ணமாயிருந்தன. 'சபாஷ்' என்ற உர்து வார்த்தை சிவநேசச் செல்வரான குமர குருபர சுவாமிகளின் செந்தமிழ்ப் பிரபந்தத்திலும் குடியேறி விட்டது. ஆங்கிலேயர் முதலான ஐரோப்பியர்களோடும் அவர்களுடைய சரக்குகளோடும், அந்த மேற்குத் திசைச் சொற்களும் இறக்குமதியாகித் தமிழோடு கலந்து விட்டன. "ஐயோ! தொட்டு விடாதே! தமிழைத் தூய தமிழாக வைத்துக் கொள்ளப் போகிறோம்!" என்று சொல்லி இத்தகைய தமிழ் வளர்ச்சியைத் தடுக்க முடியுமா?

ஒரு பாஷைக்குப் பழமை என்ற பெருமை மட்டும் போதாது; வளர்ச்சி அடைய உரிமையும் வேண்டும். 'தூய தமிழ்' என்ற பெயரால் பாஷையுலகில் கூடத் 'தீண்டாமை'யை வைத்துக் கொள்ள முடியாது.

இலக்கணம் என்பது பாஷையின் லட்சணம்: வளர்ச்சியைத் தடுக்கும் இறுக்கமும் அவலட்சணமுமான ஏதோ ஒரு பழைய உருக்குச் சட்டை யல்ல! பாஷை வளர வளர இடம் கொடுத்துத் தானும் வளர்ந்து கொண்டே போய் அதன் சிறப்பியல்பையும் வளர்ச்சி முறையையும் பாதுகாப்பது இலக்கணம் என்பதாகத் தொல்காப்பியர் கருதினார் என்றே ஊகிக்கலாம்.

---

## நல்ல யோசனை!



"உம்மிடமிருந்து பணம் வசூலிப்பதற் கால் ஒடிந்து விடுகிறது! தினம் மூன்று மைல் நடக்கவேண்டியிருக்கிறது."

"அடடா! அடுத்த வீடு காலியா யிருக்கிறது; அதற்குக் குடிவந்து விடுங்களேன்!"



## இந்த கனவான்

● ● ● ஒருவர் தான் அவரது குடும்பத்தில் சம்பாதிக்கக் கூடியவர். ஆதலால் அவருக்கு நாம் நீண்ட ஆயுளையும் அதிர்ஷ்டமும் பொங்க வேண்டுகின்றோம்.

ஆனால் இந்த அநித்ய மான நாட்களில் அவருக்கு ஏதேனும் துரதிர்ஷ்டவசத்தால் ஆபத்து மரணம் இவைகள் ஏற்பட்டு விட்டால்..............

அவருக்குப் பிறகு அவரது குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பை யார் ஏற்றுக்கொள்ளப் போகிறார்கள்?

தனது ஆயுளை நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் அவர் இன்ஷ்யூர் செய்திருப்பாரானால் அந்தப் பொறுப்பை "நேஷனல் இன்ஷ்யூரன்ஸ்" சந்தேகமில்லாமல் ஏற்றுக்கொள்ளும்.

விவரங்களுக்கு:

## நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.,

தலைமை ஆபீஸ்: 7, கௌன்ஸில் ஹௌஸ் தெரு, கல்கத்தா.
மதராஸ் பிராஞ்சு:—362, சைனா பஜார் ரோடு, எஸ்பிளனேட், மதராஸ்.

டிரேட் மார்க் **விலைகள் மாறுதல் கவனிக்கவும்** டிரேட் மார்க்



தங்க மெடலும், நற்சாக்ஷிப் பத்திரங்களும்
பரிசு பெற்ற
ஒரிஜினல்

## கல்ச்சர் வைரங்கள்

(REGD NO. 1983)



**தோடு சைஸ்**
**0-12-0**



'Original" Inventor

**பேஸரி சைஸ்**
**0-10-0**

[கேட்லாக் இனாம்]

**M. ராமசாமி செட்டி & கோ., (REGD)**

ஷராப் வியாபாரம் : : திருச்சினாப்பள்ளி

★ ........ நம் அரசியல் தலைவர்கள் எல்லோரையும் வாத்தியார் வேலையில் போட்டு மடக்கினால் ஒருவேளை ஒத்துப் போவார்களோ என்று தோன்றிற்று.

# வேலூர் அதிசயங்கள்

[ "நாடோடி" :: சாமா ]

● "என்ன ஸார்! வேலூருக்கு இப்பத்தான் முதல் தடவையாக வருகிறீர்களோ? அப்படியானால் வேலூரில் நீங்கள் பார்க்க வேண்டிய அதிசயங்கள் எவ்வளவோ இருக்கின்றன. முதலாவது, துருப்புகள் இல்லாத கோட்டை; இரண்டாவது, தண்ணீர் இல்லாத நதி; மூன்றாவது, சுவாமி இல்லாத கோவில்; நான்காவது, —"

இப்படி அன்று வேலூரில் மாகாணக் கல்வி மகாநாடு நடந்த மண்டபத்துக்குப் போய்ச் சேர்வதற்குள், வழியில் கண்டவர்கள் எல்லாம் வேலூரின் அதிசய புராணத்தை என்னிடம் படிக்கத் தொடங்கி விட்டனர்.

கடைசியில், மகாநாட்டு மண்டபத்துக்குள் நுழைந்தேன். அங்கே வரவேற்புக் கழகத்தின் தலைவரான ஸ்ரீ ஆதிசேஷையாவும், தம் வரவேற்புரையில் வேலூர் அதிசயங்களைப் பற்றிக் குறிப்பிட ஆரம்பித்தார். எனக்கு "என்னடா!" என்று ஆகி விட்டது. வெளியூர்க்காரர்களை இப்படி ஹிம்சை செய்யும் ஜனங்களும் இருப்பார்களா என்று அதிசயமாயிருந்தது. ஆனால் வேலூர் அதிசயங்கள் எனக்கு அதிசயமாகத் தோன்றவில்லை. மேற்படி மாகாணக் கல்வி மகாநாட்டிலேதான் சில உண்மையான அதிசயங்கள் தென்பட்டன.



● சென்னையின் பிரசித்தி பெற்ற ஹைஸ்கூலின் பிரசித்தி பெற்ற தலைமை உபாத்தியாயரான குருகுல தர்ம ஆசார்ய ஸ்ரீ கே. ரங்கசாமி அய்யங்கார் அவர்கள் மேற்படி மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க ஒப்புக் கொண்டது பெரிய ஆச்சரியம்.



இந்த மனிதரை அவர் பள்ளிக்கூடத்தை விட்டு, வரவேற்புக் கழகத்தார் எப்படி வெளியே இழுத்தார்களோ, தெரியவில்லை.

ஏனெனில் ஆசார்ய ரங்கசாமி ஐயங்கார் இந்தப் பரந்த உலகில் தம் பள்ளிக்கூடமான ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூலைத் தவிர வேறு எதுவும் இருப்பதாக ஒப்புக்கொள்வது கிடையாது! தமது வேலையில் அத்தனை ஆர்வமுடையவர்.

ஆனால், தமது பள்ளிக்கூடத்தை விட்டு மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க வந்த காரணத்தை அவரே தம் தலைமையுரையில் வெளியிட்டு விட்டார். இத் தலைமைப் பதவியைத் தம் பள்ளிக்கூடத்துக்கு அளிக்கப்பட்ட கௌரவமாகவே கருதி அதை ஒப்புக் கொண்டாராம்!

● முப்பத்து நான்கு வருஷங்களாக, வருஷா வருஷம், மாகாணம் முழுவதும் உள்ள வாத்தியார்கள் ஒன்று கூடி நடத்தி வைக்கும் மகாநாடு, அதுவும் இவ் வருஷம் ஸ்ரீ கே. ரங்கசாமி அய்யங்கார் தலைமை வகிக்கிறார் என்பதிலிருந்து மகாநாடு பிரமாதமாகத்தான் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றிற்று. அதனால்தான் வேலூருக்குப் போவதென்றும் தீர்மானித்தேன்.

நான் எதிர்பார்த்ததேபோல் மகாநாடு மிக அமர்க்களமாய்த்தான் நடந்தது. தலைவர் பாண்டு வாத்தியத்துடன் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். தேசியகீதங்களும் பாடப் பட்டன.

மாகாணத்தின் நாலா திசைகளிலிருந்தும்





சுமார் ஐந்நூறு உபாத்தியாயர்கள் இம்மகாநாட்டுக்குப் பிரதிநிதிகளாக வந்திருந்தார்கள். (அவர்களில் சிலருடைய முகத்தோற்றங்கள் இங்கே தரப்பட்டிருக்கின்றன.) பார்வையாளர் கூட்டத்துக்கும் குறைவில்லை. மற்றும், அக்கிராசனர் தலைமை யுரையைப் படித்து முடிக்க 57 நிமிஷம் பிடித்ததென்றால் அது எவ்வளவு மகத்தான மகாநாடாக இருக்க வேண்டும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்!



● பொது ஜனங்களாகிய நாம் பொதுவாக உபாத்தியாயர்களைப் பற்றி எவ்வளவு தவறுதலான அபிப்பிராயம் வைத்திருக்கிறோம் என்பது மேற்படி மகாநாட்டிலிருந்து எனக்கு நன்கு தெரிய வந்தது.





வாத்தியார்கள் என்றால் ஊன்றுத் தவலைகள், கட்டுப்பெட்டிகள், என்றெல்லாம் நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம் அல்லவா? இது எவ்வளவு பிசகான அபிப்பிராயம் என்பதை மகாநாட்டுக்கு வந்திருந்த உபாத்தியாயர் பிரதிநிதிகள் நிரூபித்து விட்டனர்.

உதாரணமாக யுத்த நெருக்கடியைப் பற்றி நமக்கெல்லாம் தெரியுமோ, தெரியாதோ, அங்கு வந்திருந்த வாத்தியார்களில் யுத்த நெருக்கடியைப்பற்றிப் பேசாதவர்கள் கிடையாது. யுத்தத்துக்குப் பிறகு நம் நாட்டின் ஸ்திதி எப்படி இருக்குமோ என்று கவலைப் படாதவர்களும் இல்லை.

உபாத்தியாயர்களின் மனப்பான்மையில் தான் குறுகிய நோக்கம் ஏதாவது தென்பட்டதா? "எங்கள் ஊர், எங்கள் பள்ளிக்கூடம்" என்ற வார்த்தைகளையே அவர்கள் பேச்சில் காண முடியவில்லை. "தமிழ் நாடு" "சென்னை மாகாணம்" ஆகியவற்றுடன் கூட அவர்கள் நிற்கவில்லை. எல்லாரும், "இந்தியா, இந்திய உபாத்தியாயர்கள், இந்திய மக்களுக்கு வேண்டிய கல்வி" என்று இப்படியே பேசினார்கள்! சிலர் உலகப் பெருநோக்குடன் விஷயங்களை நோக்கத் தொடங்கி விட்டனர். குறிப்பாக மதனபள்ளி ஸ்ரீ சுப்ரமண்யம் அவர்கள் ஸ்ரீ வெண்டல் வில்கியைப் போல் 'க்ளோபல்' (global) வேதாந்தமே பேச ஆரம்பித்து விட்டார்! தனி வகுப்பினர்களுக்கென்று தனிப்பட்ட பள்ளிக்கூடங்கள் கூடாது என்று ஜநாப் அப்துல் குடுஸ் வீராவேசமாகப் பேசிய போது மகாநாட்டில் ஏற்பட்ட உற்சாகம் சொல்லி முடியாது.

● மகாநாட்டில் குழுமியிருந்த உபாத்தியாயர்கள் வகுப்பு, மத வித்தியாசமின்றி ஒரு குடும்பத்தில் பிறந்த சகோதரர்களைப் போல் பழகிக் கொண்டதைப் பார்த்த போது, நம் அரசியல் தலைவர்கள் எல்லாரையும் அங்கங்கே வாத்தியார் வேலையில் போட்டு மடக்கினால் ஒரு வேளை ஒத்துப் போவார்களோ என்று தோன்றிற்று. இன்னும், இந்த வாத்தியார்கள் முக்கியமாக விவாதித்த விஷயம் என்ன வென்று சொன்னாலே, இவர்களின் பரந்த நோக்கம் நன்கு புலப்படும். இவர்கள் விவாதித்த விஷயம் இன்றைய, நாளையக் கல்வியைப் பற்றியல்ல; யுத்தத்துக்குப் பின்







தைய கல்வியைப் பற்றி! ஆம்; யுத்தத்துக்குப் பிந்தைய கல்வி முறையைப் பற்றி இனம் இனமாக எடுத்துக்கொண்டு சாங்கோபாங்கமாக விவாதித்தார்கள்!

● தாய் தந்தையர்களுக்கு அடுத்தபடி தெய்வமாக மதிக்கப்பட வேண்டியவர்கள் உபாத்தியாயர்கள் என்பது நம் நாட்டு மரபு. அத்தகைய நாட்டில் இன்று உபாத்தியாயர்களின் நிலைமை எத்தனை க்ஷீண தசையில் இருக்கிறது என்பதை நினைத்துப் பார்க்க மிகவும் வருத்தமாக இருக்கிறது. அதைச் சில வாத்தியார்களே எடுத்துச் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டபோது எனக்குக் கண்ணீரே வந்துவிட்டது.

யுத்த அலவன்ஸ் கொடுப்பதற்குக் கூட அதிகாரிகள் யோசிக்கிறார்கள் என்று சில ஏழை உபாத்தியாயர்கள் குறைப்பட்டுக் கொண்டபோது அக்கிராசனர் ஸ்ரீ ரங்கசாமி அய்யங்காருக்குப் பொறுக்க முடியவில்லை. "நாம் யாரையும் கையைக் கட்டிக்கொண்டு கெஞ்ச வேண்டியதில்லை. நாம் எல்லாரும் ஒன்று பட்டு, நம் கடமையைச் சரிவரச் செய்தால் உலகமே நம் காலில் வந்து விழும்" என்று அவர் தைரியம் கூறினார்.





● உபாத்தியாயர்களை உத்தேசித்து இல்லாவிட்டாலும், அவர்களிடத்தில் கல்வி பயிலும் நம் குழந்தைகளை உத்தேசித்தாவது உபாத்தியாயர்களின் கஷ்டங்களைப் போக்கி, அவர்களுக்குத் தகுந்த மரியாதை அளிக்கவேண்டியது நம் கடமையாகும்.



இது விஷயமாக மகா நாட்டைத் திறந்து வைத்த ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் கூறிய ஒரு உதாரணம் குறிப்பிடத் தகுந்தது.

இங்கிலாந்தில் இரண்டாவது சார்லஸ் அரசன் காலத்தில், டாக்டர் பஸ்பி என்பவர் ஒரு பள்ளிக்கூடம் நடத்திக் கொண்டிருந்தார். அதைப் பார்வையிடுவதற்காக ஒரு சமயம் இரண்டாவது சார்லஸ் மன்னர் சென்றாராம். அப்பொழுது டாக்டர் பஸ்பி தம் தொப்பியைக் கழற்றி அரசருக்கு மரியாதை செய்யவில்லையாம். பிறகு அரசரைத் தனிமையில் கண்டு, "தொப்பியைக் கழற்றாமல் இருந்ததற்காக மன்னிக்க வேண்டும். என்னை விடப் பெரியவர்கள் உண்டு என்று பிள்ளைகள் நினைக்க விடுவது பிசகு என்று கருதியே தொப்பியை எடுக்கவில்லை" என்றாராம்.

● ஆகக்கூடி, மேற்படி கல்வி மகாநாட்டிலிருந்து நான் கற்றுக் கொண்ட பாடம் என்னவென்றால், உபாத்தியாயர்கள் என்றால் சாமானியப்பட்டவர்கள் அல்ல;—ராஜாக்களை விடப் பெரிய மகா ராஜாக்கள் என்பதுதான்.

● ● ●

★ "பாவம்! சுசீலாவுக்கு இந்த மாதிரி கஷ்ட காலம் வரும் என்று யார் நினைத்தார்கள்? தங்கமணியும் எவ்வளவோ நல்லவன். பெண்டாட்டியிடம் எப்படி உயிராயிருந்தான்? அவனா இப்படி ஆகிவிடுவான்?........"

# உடைந்த வளையல்

தொடர்கதை — து. ரா.

**பதினொன்காம் அத்தியாயம்**
**சுசீலாவுக்கு ஜுரம்**

பட்டுவும் மணியும் அன்றிரவு தங்கமணி வீட்டிலேயே படுத்துத் தூங்கிவிட்டார்கள். மறுநாள் காலை வீட்டுக்கு வந்ததும் ராஜம்மாள், "சர்கஸ் எப்படிடா இருந்தது? ராத்திரி ரொம்ப நாழியாயிற்றோ?" என்று கேட்டாள். பட்டு இதற்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே மணி குறுக்கிட்டு, "சித்தி சர்க்கஸுக்கு வரவில்லை, அம்மா! நாங்கள் மட்டுந்தான் போனோம்" என்றான்.

"அவளுக்கு ஸினிமாவும் பாட்டுக் கச்சேரியுந்தான் பிடிக்கும். சர்க்கஸெல்லாம் பிடிக்காது. நீங்கள் மட்டும் தான் போனீர்களாக்கும்?"

"இல்லை, அம்மா! சித்தி முதலிலே வருகிறேன் என்றுதான் டிரெஸ் எல்லாம் பண்ணிக் கொண்டாள். அப்புறம் என்னமோ அவளுக்குக் கோபம் வந்துவிட்டது போலிருக்கிறது. நானும் பட்டுவும் மதுரம் மாமியோடு காரில் போய் உட்கார்ந்து கொண்டு இருந்தோம். அப்புறம் சித்தப்பா மாத்திரம் வந்து காரிலே உட்கார்ந்து காரை திடீரென்று ஸ்டார்ட் பண்ணிவிட்டார். சித்தி எங்கே என்று கேட்டால், அவள் வரவில்லையாம் என்று கோபமாய்ச் சொன்னார்" என்றான்.

ராஜம்மாளுக்கு அப்பொழுதுதான் பேச்சில் சுவாரஸ்யம் உண்டாயிற்று.

"மதுரம் சர்க்கஸுக்கு வந்தாளா?"

"வந்தாள்."

"ஏண்டி! சுசீலாவை அழைத்துக் கொண்டு போகாமல், உங்களையும் மதுரத்தையுமா அழைத்துக் கொண்டு போனான்? நன்றாயிருக்கிறது! பெண்டாட்டியை வீட்டிலே காவல் வைத்து விட்டுச் சமையல்காரியுடன் ஸினிமாவுக்கும் டிராமாவுக்கும் போகிறது!" என்றான்.

"அதற்கு என்ன அம்மா பண்ணுகிறது? சித்திதானே வரமாட்டேன் என்று சொல்லிவிட்டாள்? பாவம், அந்த மதுரம் மாமி ஒருத்தரோடும் பேசாமல் தலையைக் குனிந்தபடியே உட்கார்ந்திருந்தாள். ஸர்க்கஸ் வேடிக்கையைக் கூடப் பார்க்கவே இல்லை" என்றான் பட்டு.

"இருந்தாலும் பார்க்கிறவர்கள் என்ன சொல்லுவார்கள்? புருஷனை இழந்தவள்; சிறிசு; இப்படிப் புது இடத்தில் தனியாய் வந்து இருப்பதே பிசகு. இந்த மாதிரி எதற்கும் நான் முந்தி என்று கிளம்பி விடலாமா?"

"அவள் ஒன்றும் கிளம்பவில்லை, அம்மா! அவள் 'சர்க்கஸே எனக்குப் பிடிக்காது; நான் வரவில்லை' என்றுதான் சொன்னாள். சித்தி தான் 'நீ வந்துதான் ஆகவேண்டும்' என்று அவளை பலவந்தம் பண்ணி எங்களோடு காரிலே உட்கார வைத்தாள்."

"அப்போது அவளும் கூட வருகிறது தானே?"

பட்டுவுக்குக் கோபமாய் வந்தது. "அவளும் வருகிறதாய்த் தான் இருந்தாள் என்று எவ்வளவு தரம் சொல்லுகிறது? உனக்குச் சொல்லி முடியாது. போ!" என்று கூறிவிட்டு அங்கிருந்து போய் விட்டான்.

மறுநாள் வம்பர் மகா சபையில் தங்கமணி வீட்டு விஷயம் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது என்று சொல்ல வேண்டியதில்லை. விவாதம் ஆரம்பித்து அரைமணி நேரத்திற்குப் பிறகுதான் ராஜம்மாள் அங்கு வந்தாள். அங்கே, தன் மைத்துனன் வீட்டு விஷயம் அடிபடும், தானும் பூரா விவரங்களும் அறிந்து கொள்ளலாம் என்று எதிர்பார்த்துத்தான் அவள் அங்கே வந்தது. ஆனால் அவளைக்

கண்டவுடன், பேசிக் கொண்டிருந்தவர்கள் சட்டென்று அந்த விஷயத்தை அப்படியே நிறுத்தினார்கள். ராஜம்மாளும் சாமர்த்தியமாக முதலில் சுசீலா வீட்டு சமாசாரத்தைப் பற்றித் தன் வாயைத் திறந்து ஒரு வார்த்தையும் வெளியிடவில்லை. தனக்கு அதைப் பற்றி ஒன்றுமே தெரியாதது போலவே காட்டிக் கொண்டாள். ஆனால் அந்த இடத்தை விட்டு எழுந்து வீட்டுக்குப் போவதற்குள், அவர்களிட மிருந்து எவ்வளவு அறியலாமோ அவ்வளவும் அறிந்து கொண்டு விட்டாள். அன்று எல்லோரும் சர்க்கஸுக்குக் கிளம்பினதே சுசீலாவின் வற்புறுத்தலினால் தானாம்; சுசீலாவுக்கு சர்க்கஸ் என்றால் ரொம்ப ஆசையாம். ஏன், அவள் உயிரே சர்க்கஸில் தான் இருந்ததாம்! மதுரத்தை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டுப் போகலாம் என்று இருந்தாளாம். கிளம்புகிற பொழுது திடீரென்று தங்கமணி "மதுரமும் வரட்டும்" என்றானாம். மதுரத்தை அழைத்துக்கொண்டு போக சுசீலாவுக்கு இஷ்டமில்லையாம். எங்கே பார்த்தாலும் அவளையும் அழைத்துக்கொண்டு போனால் பார்க்கிறவர்கள் ஏதாவது சொல்வார்கள் என்று சுசீலா வேண்டாம் என்றாளாம். "அதெல்லாமில்லை; அவளும் வரத்தான் வேண்டும்" என்றானாம் தங்கமணி. சுசீலாவுக்குக் கோபம் வந்து, "அவள் வருகிறதாயிருந்தால் நான் வரவில்லை" என்றாளாம். தங்கமணி, "சரி, நீ வராவிட்டால் போ. நான் அவளை அழைத்துக்கொண்டு போகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டானாம்.

இந்த வம்பைக் கேட்டதும் "என்ன அக்கிரமம் இது! இவர்கள் சமாசாரம் ஊர் சிரிக்கும்போல் இருக்கிறதே. வெயிலானாலும் சரி, மழையானாலும் சரி, போய்ப் பார்த்து விட்டுத்தான் வருகிறது!" என்று தீர்மானித்துக் கொண்டு ராஜம்மாள் தங்கமணி வீட்டுக்குப் போனாள்.

"சுசீலா!" என்று கூப்பிட்டுக் கொண்டு ஹாலுக்குள் நுழைந்ததுமே அவள் சற்றும் எதிர்பாராத காட்சி ஒன்று அவள் முன் தோற்றமளித்தது. கட்டிலின் மேல் விரிக்கப்பட்டிருந்த படுக்கையில் மதுரம் உட்கார்ந்திருந்தாள். அவள் மடிமேல் தலையை வைத்துக் கொண்டு படுத்திருந்தாள் சுசீலா. அவள் நெற்றியின் மேல் ஈரத் துணி ஒன்று மடித்துப் போடப்பட்டிருந்தது. கையில் விசிறியை வைத்துக் கொண்டு, கவலை நிறைந்த முகத்துடன் மதுரம் அவளுக்கு விசிறிக் கொண்டிருந்தாள். ராஜம்மாள் வந்ததும், "வாருங்கோ அம்மாமி; அக்காவுக்கு உடம்பு சரியாயில்லை. ரொம்ப ஜுரம் காய்கிறது" என்றாள். அப்பொழுது சுசீலா கண்ணைத் திறந்து பார்த்தாள்.

ராஜம்மாள் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்து "என்ன சுசீலா! உடம்பு என்ன பண்ணுகிறது? ஐயோ, நெருப்புப் பறக்கிறதே? எனக்கு ஒன்றும் தெரியாதே. எத்தனை நாளாய் இப்படி ஜுரம்? உங்க அப்பாவைப் பார்த்தேனே, அவரும் ஒன்றும் சொல்லவில்லையே" என்றாள்.

"இன்றைக்குத்தான், அம்மாமி, ஜுரம். நேற்று ராத்திரி தலை வலிக்கிறது என்று சொன்னாள். கார்த்தாலே கொஞ்சம் கத கத என்று இருந்தது உடம்பு. அவர் டாக்டரை அழைத்துக் கொண்டு வருகிறேன் என்றார். அக்கா, 'இது என்ன பிரமாதம்? டாக்டர் வேண்டியதில்லை. ஒரு வேளை கஞ்சி சாப்பிட்டால் சரியாய்ப் போய்விடும்' என்றாள். அவர் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குப் போன அப்புறம், வெயில் அதிகமாக ஆக ஜுரம் அதிகமாய் விட்டது. மாமா கொட்டகையிலே இருக்கிறார். அவர் கிட்டே சொல்லி டாக்டரை அழைத்துக் கொண்டு வரச் சொல்லட்டுமா என்று கேட்டால் கூட, 'வேண்டாம், பார்த்துக் கொள்ளலாம்' என்கிறாள். எனக்கு என்ன பண்ணுகிறதென்றே தெரியவில்லை" என்றாள் மதுரம்.

"நன்றாயிருக்கிறது! நான் போய் டாக்டரை அழைத்துக்கொண்டு வரச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு ராஜம்மாள் சர்மாவிடம் வந்து "நல்ல காரியம் பண்ணுகிறீர்கள் எல்லாருமாய்ச் சேர்ந்து! சுசீலாவுக்கு ஜுரம், நெருப்புப் பறக்கிறது. நீங்கள் பாட்டுக்கு இங்கே உட்கார்ந்துகொண்டு ராட்டினம் சுற்றிக்கொண்டு இருக்கிறீர்களே? போய் டாக்டரை அழைத்து வாருங்கள்; அப்படியே தங்கமணியின் ஆபீஸுக்குப் போய் அவனையும் அழைத்துக் கொண்டு வந்துவிடுங்கள்" என்று உத்தரவிட்டாள்.

பாவம், அவள் மனதுக்கு அன்று திருப்தி ஏற்படவில்லை. சுசீலாவிடம் என்னென்ன கேள்விகள் கேட்டது, தான் என்ன என்ன சொல்வது என்றெல்லாம் அவள் யோசனை பண்ணிக் கொண்டுவந்தது முற்றிலும் வீணாயிற்று.

## பதினைந்தாம் அத்தியாயம்
## பஞ்சுவின் சிரிப்பு

அவன் தன் வீடு திரும்பியபோது கூடத்தில் பட்டுவும் மணியும் உட்கார்ந்து, 'கேரம்' ஆடிக் கொண்டிருந்தார்கள். முற்றத்தில் பஞ்சு வேறு வேலையில் ஈடுபட்டிருந்தான். ஒரு எலுமிச்சம்பழத்தை நறுக்கிக் கண்ணாடி டம்ளரில் அவன் சாறு பிழிந்து கொண்டிருந்தான். அப்பொழுது மணி, "மாமா! எல்லா காயினையும் பாக்கெட் பண்ணியாச்சு. க்வீனை யாரும் பாக்கெட் பண்ணவில்லை. அது மாத்திரம் மீந்து போச்சு. இப்போ என்ன பண்ண வேண்டும்?" என்று கேட்டான்.

"கொஞ்சம் ஜலம் விட்டு, சர்க்கரையும் போட்டுக் கலந்து சாப்பிட வேண்டும்; அவ்வளவுதான்" என்றான் பஞ்சு.

உள்ளே நுழைந்த ராஜம்மாள் "எதிலேடா சர்க்கரையைப் போட்டுச் சாப்பிடணும்?" என்று கேட்டுக்கொண்டே வந்தவள், பஞ்சு செய்து கொண்டிருந்த காரியத்தைப் பார்த்ததும், "நன்றாயிருக்கிறது! ஏண்டா, இத்தனை நாழிகைக்கு மேலேயா எலுமிச்சம் பழ சர்பத் சாப்பிடுவது? சளி பிடித்துக் கொள்ளுமே" என்றாள்.

பஞ்சு ஷர்பத்தில் சர்க்கரை போட்டுக் கலக்கிக்கொண்டே "ஹூம், அதெல்லாம் ஒண்ணும் பிடிக்காது. இந்த வெயிலே என்னாலே தாங்க முடியவில்லை. ஏண்டாப்பா இந்த ஊருக்கு வந்தோம் என்று இருக்கிறது. எந்த ஊரிலேயும் நான் பார்த்ததில்லை அம்மா, இந்த மாதிரி வெயில்! இந்த எலுமிச்சம் பழத்தைத் தலையிலே தேய்த்துக் கொண்டு ஸ்நானம் பண்ணட்டுமா?" என்றான்.

"என்ன, பைத்தியமா உனக்கு? பைத்தியத்துக்குத்தான் தலையில் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து தேய்ப்பார்கள்" என்று பரிகசித்து விட்டுப் பட்டுவைப் பார்த்து, "ஏண்டி பட்டு, அன்றைக்கு சர்க்கஸுக்குப் போனீர்களே, அன்று சுசிலா எப்படி இருந்தாள்? உடம்பு ஒன்றும் இல்லாமல் சாதாரணமாய்த்தானே இருந்தாள்?" என்று கேட்டாள்.

பட்டு ஆட்டத்தை நிறுத்தி விட்டு திரும்பி "ஏன், நன்றாய்த் தானே, அம்மா, இருந்தாள்? உடம்பு சரியில்லையா என்ன சித்திக்கு இப்பொழுது?" என்று கேட்டாள்.

"காலையிலிருந்து ஒரே ஜுரமாம். இப்போது ரொம்ப ஜாஸ்தியாய்ப் போயிருக்கிறது. சுசிலா கவலையினால் தான் உருகிப் போகிறாள். ஜுரமும் அதனால்தான் வந்தது."

பட்டு இதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் பஞ்சு சர்பத்தை உறிஞ்சிக் கொண்டே, ரொம்ப ஹாஸ்யமாகப் பேசும் தோரணையில், "பாவம், கவலையில்லாமல் இருக்குமா? இருந்து இருந்து ஒரு புருஷன். அவனுக்கும் சமையல்காரி சிநேகிதம்" என்றான்.

ராஜம்மாள் சட்டென்று தன் குழந்தைகள் பக்கம் திரும்பிப் பார்த்தாள். பிறகு தாழ்வாரத்தின் ஓரத்தில் போட்டிருந்த கடப்பைக் கல்லின் மேல் தூணில் சாய்ந்தபடி உட்கார்ந்து, தன் குழந்தைகளுக்குக் கேட்கக் கூடாது என்று மெதுவான குரலில், "அது யாருடா சொன்னது உனக்கு?" என்று தன் தம்பியைக் கேட்டாள்.

பஞ்சு, "ஒருவர் சொல்லுகிறது என்ன? ஊரெல்லாம் தான் தெரிந்து இருக்கிறதே! ஏதாவது மூடி வைத்திருக்கிறானா என்ன அவான்? எல்லாம் தான் பப்ளிக்காய் நடக்கிறதே!" என்றான். ராஜம்மாள் மேலும் ஏதாவது விசாரிப்பாள் என்று அவன் எதிர்பார்த்தும் அவள் ஒன்றும் கேளாமையால் தானே சொல்லிவிட்டால் போகிறது என்று தீர்மானித்து, "அந்தக் கிழமும் அப்படி ஒன்றும் யோக்கியமில்லை. அது தானே அந்தப் பெண்ணை இங்கே அழைத்துக் கொண்டு வந்தது? அதுவும் அப்படித்தானாம்" என்றான்.

"என்னமோ எனக்கு ஒன்றுமே புரியவில்லை, அப்பா! இது கடைசியிலே எப்படிப் போய் முடியுமோ? பாவம்! சுசிலாவுக்கு இந்த மாதிரி கஷ்டகாலம் வரும் என்று யார் நினைத்தார்கள்? தங்கமணியும் எவ்வளவோ நல்லவன். பெண்டாட்டியிடம் எப்படி உயிராய் இருந்தான்? அவனா இப்படி ஆகிவிடுவான்? என்னமோ ஒன்றுமே நம்ப முடியவில்லை" என்றாள்.

பஞ்சு கேலியாகச் சிரித்தான். "என்னடா சிரிக்கிறாய்?" என்று கேட்டாள்.

"கடைசியில் இந்தப் பெண் இவனையும் ஏமாற்றி விட்டு எங்காவது ஸினிமாவில் சேர்ந்துவிடப் போகிறது" என்றான்.

"ஏன், உன்னிடம் சொன்னானோ?"

"இல்லை" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது அவன் மடியிலிருந்து ஒரு கடிதம் கீழே விழுந்தது. (தொடரும்)

## படித்துப் பார்

### வஸந்தம் ★

[பிரசுரம்: "வஸந்தம்" காரியாலயம், கோயமுத்தூர்; தனிப் பிரதி: விலை அணு 12.]

புதிய அழகிய உருவத்துடன் புனர் ஜன்மம் எடுத்து வந்திருக்கும் "வஸந்த"த்துக்கு நல்வரவு கூறுகிறோம். வஸந்தகாலம் வருஷத்துக்கு ஒரு முறைதான் வருகிறது. "வஸந்தம்" பத்திரிகையோ மாதம் ஒரு தடவை வந்து நம்மை மகிழ்வித்துக் கொண்டிருக்கும். பாவித் துச்சாதனனுடைய கையைத் "தாமரைக் கை" என்றும், பத்தினி துரோபதையைக் "கொடியாளே!" என்றும் குறிப்பிட்ட கவி யார் என்று உங்களுக்குத் தெரியுமா? தெரியாவிட்டால், டி. கே. ஸி. அவர்கள் வைகாசி "வஸந்தத்தி"ல் எழுதியுள்ள கட்டுரையைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். இன்னும் இந்த இதழானது ராஜாஜி, ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை, சுவாமி சுத்தானந்த பாரதி, ஸர். ஆர். கே. ஷண்முகம் ஆகிய பிரமுகர்களின் அரிய எழுத்துக்களையும், கு. ப. ரா., ஆர். ஷண்முக சுந்தரம், மு. அருணாசலம் முதலிய இளம் எழுத்தாளர்களின் இனிய விஷயங்களையும் தாங்கி வந்திருக்கிறது.

"வஸந்த"த்தின் ஆசிரியர் யார் என்பதையும் ஞாபகப்படுத்தி வைக்கிறோம். ஸ்ரீ ஆர். திருஞான சம்பந்தம்; — இளம் தென்றலைப் போன்ற இன்பத் தமிழ் நடை எழுதும் இளைஞர் திருஞான சம்பந்தந்தான்.

### குமரன் பஞ்சாங்கம் ★

[கணித்தவர்: ஸ்ரீ சிவராமன்; பிரசுரம்; தவசி குப்புசாமி முதலியார், காஞ்சீபுரம்: விலை: அணு 0—7—0.]

சுபானு வருஷத்திய நட்சத்திர ஜீவ நேத்ர ஸௌர சாந்திரமான சர்வ முகூர்த்த சுத்தத் திருக் கணித குமரன் பஞ்சாங்கமானது, "கணித சுத்தத்திற்கும் பிழையில்லாத பதிப்புக்கும் சிறந்த அத்தாட்சி" என்பதை மேலட்டையிலேயே தெரிந்து கொள்ளலாம்.

### மானிட ஜாதியின் சுதந்திரம்

[ஆசிரியர்: இங்கர்ஸால்; மொழிபெயர்ப்பு: வெ. சாமிநாத சர்மா; பிரசுரம்: சக்தி காரியாலயம், காரைக்குடி; விலை: ரூ. 2.]

"ஓ! சுதந்திரமே! எட்டி யிருக்கும் ஆகாயத்தில் மிதந்துகொண்டிராதே. ஓர் உத்சாகியினுடைய, கொடையாளியினுடைய கனவிலே வாழ்ந்து கொண்டிராதே. கீழே இறங்கி வந்து, மனிதர்களுடைய குழந்தைகளின் மத்தியில் உன் இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொள்" என்று அமெரிக்கப் பேரறிஞர் இங்கர்ஸால் உருக்கமாகச் சுதந்திரத்தை அறைகூவி அழைக்கிறார். அந்த ஆக்ரோஷப் பிரசங்கத்தின் நல்ல மொழி பெயர்ப்பு இந் நூல்.

## சாதுரியக் கதை

### கடவுளைக் கண்டான்!

[பாலமணி]

● ஒரு ஊரில் ஒரு யோகி இருந்தார். அவரிடம் ஒரு நாள் ஒரு வம்புக்காரன் சென்று, கீழ்க்கண்ட இரண்டு கேள்விகளைக் கேட்டான்:

"எல்லா விடத்திலும் கடவுள் வியாபித்துள்ளார் என்று கூறுகிறீர்களே; ஆனால் நான் அவரை ஒரு இடத்திலும் காண முடியவில்லையே, ஏன்?" — இதுதான் அவன் முதல் கேள்வி.

"மனிதன் செய்யும் ஒவ்வொரு செய்கையும் கடவுளின் கட்டளைப்படி நடக்கிறது என்கிறீர்களே? அப்படியானால் மனிதன் செய்யும் பாவங்களும் கடவுளிடமிருந்து தானே வருகின்றன? அத்தகைய பாவங்களுக்காக மனிதன் தண்டிக்கப்படுவது எப்படி நியாயமாகும்?" — இதுதான் இரண்டாவது கேள்வி.

இந்தக் கேள்விகளுக்குப் பதிலாக அந்த யோகியானவர் ஒரு மண்ணாங் கட்டியை எடுத்து அந்த வம்புக்காரன் தலையில் ஓங்கி அடித்தார்.

அந்த மனிதன் நியாயஸ்தலத்துக்குப் போய் நீதிபதியிடம் தன் வழக்கை எடுத்துரைத்து, நியாயமான தீர்ப்புக் கூற வேண்டினான். யோகி நியாயஸ்தலத்திற்கு அழைக்கப்பட்டார்.

நியாயாதிபதியிடம் யோகி பின்வருமாறு சொன்னார்:—

"இவன், 'கடவுள் இருப்பது உண்மையானால் அவரை ஏன் காண முடியவில்லை?' என்று கேட்டான். இப்பொழுது இவன் நான் அடித்ததால் மிகுந்த வலி ஏற்பட்டதாகக் கூறுகிறான். அந்த வலியை எனக்குக் காண்பிக்கட்டும்; நான் அவனுக்குக் கடவுளைக் காண்பிக்கிறேன். இன்னும் அவன், 'கடவுள் கட்டளைப்படிதானே பாவம் செய்கிறோம். அதற்காகத் தண்டிக்கலாமா?' என்று கேட்டான். நான் அவனை அடித்தது கடவுளின் ஆக்ஞைப்படியேதான். கடவுள் ஆக்ஞைப்படி செய்த காரியத்திற்காக என்னைத் தண்டிப்பது நியாயமாகுமா?"

நீதிபதி, யோகியின் பதிலைக் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்தார். அந்த வம்புக்கார மனிதனுக்கு முகத்தில் அசடு வழிந்தது என்று சொல்லவும் வேண்டுமோ?



# பாப்பா மலர்



## கணபதியின் தாகம்

[ ஆனந்தி ]

ஒரு காட்டில் மூன்று முயல்கள் வசித்து வந்தன. அவைகளின் பெயர் நீலம், மணி, சுந்தரம். அவை மூன்றும் மிகவும் ஒற்றுமையாக இருந்தன. ஒன்று தண்ணீர் குடித்தால், மற்றவைகளும் தண்ணீர் குடிக்கும். ஒன்று சாப்பிட்டால் மற்றவைகளும் சாப்பிடும். ஒன்று தூங்கினால் மற்றவையும் தூங்கும்.

ஒரு நாள் அவை "விளையாடப் போகிறோம்" என்று அம்மாவிடம் சொல்லிவிட்டுப் போய் ஒரு ஆலமரத் தடியில் விளையாட ஆரம்பித்தன. நீலம், "ஓடிப் பிடிக்கிற விளையாட்டு விளையாடலாம்" என்றது. உடனே மூன்று முயல்களும் ஓடிப் பிடித்து விளையாடின. வெகு நேரம் விளையாடினபடியால் அவை களைத்துப் போய் விட்டன. மணிக்கு தாகத்தினால் விக்கல் எடுத்தது. அதைப் பார்த்தவுடன் நீலத்திற்கும் சுந்தரத்திற்கும் விக்கல் எடுத்தது. மணி "நீலம்! நாம் வீட்டிலிருந்து வெகு தூரம் வந்து விட்டோம். தண்ணீ குடிக்காமல் நம்மால் வீட்டிற்குப் போக முடியாது. தாகத்தினால் நடக்கக்கூட முடியவில்லை. எங்கேயாவது பக்கத்தில் குளம் இருக்கிறதா, பார்க்கலாம்" என்றது.

உடனே அவை மூன்றும் கொஞ்ச தூரம் போயின. அங்கே ஒரு சின்னக் குளம் இருந்தது. அந்தக் குளத்தில் தண்ணீர் குடித்தவுடன், சுந்தரம் "மணி! நான் இந்தக் குளத்தில் குளிக்கப் போகிறேன்" என்று தண்ணீரில் தொப்பென்று குதித்தது. மற்றவைகளும் தொப்புத் தொப்பென்று குதித்தன. கொஞ்ச நேரம் நீச்சல் பந்தயம் விட்டன.

இப்படி விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது, ஒரு யானைக் குட்டி அந்தப் பக்கமாக வந்தது. அதன் பெயர் கணபதி. கணபதிக்கும் அந்தக் குளத்தில் குளிக்க வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று. அது முயல்களைப் பார்த்து "தோழர்



களே! உங்களுடன் நானும் குளிக்க வரலாமா?" என்று கேட்டது. அதற்கு நீலம் இடி இடி என்று சிரித்து விட்டு, "நீயும் குளிக்க வேண்டுமா? இந்தக் குளம் உன் உடம்புக்குப் போதாது. ஆகையால் உனக்கென்று இதை விடப் பத்து மடங்கு பெரிதாகக் குளம் வெட்டித் தருகிறோம்; அந்தக் குளத்தில் குளி!" என்றது.



உடனே மணி, "கணபதியாரே! உன்னை இந்தக் குளத்தில் குளிக்க விட்டால் நாங்கள் கரையேற வேண்டியதுதான். உன் உடம்பே இந்தக் குளத்தை அடைத்துக் கொள்ளுமே! பிறகு எங்களுக்கு ஏது இடம் குளிப்பதற்கு?" என்று சொல்லிச் சிரித்தது.



சுந்தரம், "உடம்பைப் பார், கருப்பாய், கரியை எடுத்துப் பூசிக் கொண்ட மாதிரி! இந்தக் கருப்பு உடம்பு, குளித்தால் வெள்ளையாகி விடுமோ?" என்று சொல்லி விட்டுச் சிரித்தது.

கணபதிக்கு ஒரே கோபமாய் வந்தது. இந்த முயல்களின் கர்வத்தை எப்படி அடக்குவது? எப்படி புத்தி கற்பிப்பது? — என்று யோசனை செய்தது. உடனே அதற்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"தோழர்களே! உங்களுக்கு நான் குளிப்பது இஷ்டமில்லை. போனால் போகட்டும். ரொம்பவும் தாகமாயிருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் குடித்து என் தாகத்தையாவது தீர்த்துக் கொள்ளட்டுமா?" என்று கணபதி கேட்டது. முயல்கள் இதற்குச் சம்மதித்தன.

உடனே கணபதி தண்ணீரில் துதிக்கையை விட்டுக் குடிக்க ஆரம்பித்தது. சற்று நேரத்துக்கெல்லாம் குளத்தில் தண்ணீர் குறைந்து வருவதைக் கண்டு முயல்கள் அதிசயித்தன. கணபதியோ தண்ணீர் முழுவதையும் குடித்து விட்டு ஜலம் வெளி வராமல் இருப்பதற்காகத் துதிக்கையை மடித்துக் கொண்டது. உடனே முயல்களுக்கு அந்த யானைக் குட்டி செய்த தந்திரம் தெரிந்துவிட்டது. தாங்கள் செய்த தவறை உணர்ந்து, மூன்றும் சேர்ந்தாற்போல் கணபதியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டன. கணபதியும் அவைகளை மன்னித்துத் தண்ணீரை மறுபடியும் குளத்தில் விட்டது.

பிறகு முயல்களும் கணபதியும் சேர்ந்து சந்தோஷமாய் விளையாடின.



# காலக்ஷேபம்

### சம்பளமில்லை !

**மணி** :—ராமு, நேற்று ஒரு உத்தியோகம் கிடைத்து விட்டது. மாதம் அலவுன்ஸ் மாத்திரம் 30 ரூபாய்.

**ராமு** :—ஆனால் சம்பளம் எவ்வளவு ?

**மணி** :—சம்பளமில்லை.

**ஆர். கே. கன்னையா.**

●

### அவன் குற்றம் !

**குடு குடுப்பைக்காரன்** :—"நினைத்த காரியம் ஜயம் ஆகும், நினைத்த காரியம் ஜயம் ஆகும்" என்று பிச்சைகேட்டான்.

**கடைக்காரன்** :—நான் உனக்கு ஒன்றும் கொடுக்கக் கூடாது என்று நினைத்திருக்கிறேன். அதிலும் நீயே நினைத்த காரியம் ஜயம் ஆகும் என்று சொல்லிவிட்டாய். போய் இன்னொரு சமயம் வா.

**—பி. எஸ். நீலகண்ட ராவ்.**

●

### உதாரணம் !

**உபாத்தியாயர்** (பையனை நோக்கி):—அடே, கிருஷ்ணு, ஏண்டா நொண்டி நொண்டி நடக்கிறாய்? காலில் முள் ஏதாவது தைத்ததா ?

**பையன்** :—இல்லை ஸார், நீங்கதானே இனிமேல் காலாம் கிளாஸ் நடராஜனைப் போல் நடக்காவிட்டால் உதை விழும் என்று சொன்னீர்கள்.

**—ர. தேவநாதன்.**

●

### காரணம் !

**மாஜிஸ்ட்ரேட்** :—இரவில் நீ ஏன் அவன் வீட்டில் புகுந்தாய் ?

**கைதி** :—அது என் வீடுன்னு நினைச்சேனுங்க.

**மாஜிஸ்டிரேட்** :—பின் ஏன் அந்த அம்மாளைப் பார்த்ததும் ஓடி ஒளிந்தாய்?

**கைதி** :—அவங்க என் பொஞ்சாதின்னு நினைச்சேனுங்க.

**—பி. ஆர். கிருஷ்ணன்.**

### ஒரே அசௌகர்யம் !

**தாத்தா** (புதிதாகப் பள்ளிக்கூடம் போய் வந்த சீனுவைப் பார்த்து):—அடே சீனு ! பள்ளிக்கூடம் எப்படிடா இருக்கு ?

**சீனு** :—பள்ளிக்கூடம் ரொம்ப நன்றாயிருக்கு, தாத்தா! ஆனா அங்கே யாரோ ஒருத்தர் பிரம்பை வைத்துக்கொண்டு பசங்களெல்லாம் தமாஷாயிருக்கிறதைக் கெடுத்துண்டேயிருக்கார்.

**—ஆர். ராம சுப்ரமண்யன்.**

●

### அவசரம் !

**புருஷன்** :—டெலிபோனில் நீ கூப்பிட்டவுடன் ஒரே ஓட்டமாக ஓடி வந்தேன். இங்கு என்ன அப்படி நடந்தது ?

**மனைவி** :—நீங்கள் ரொம்ப நாழி கழித்து வந்திருக்கிறீர்கள். கொஞ்ச நேரம் முன்பு குழந்தை பாபு கால் கட்டை விரலை வாயில் வைத்துக் கொண்டிருந்த ஒரு அழகைப் பார்க்க வேணுமே ? அதற்குத்தான் கூப்பிட்டேன்.

**—கே. ராமலிங்கம்.**

●

### விஷயம் தெரிந்தவர் !

**ரேடியோ வைத்திருப்பவர்** (திருச்சியை திருப்பி வைத்துவிட்டு) :—இன்றைக்கு ஒரு மேளமும், கச்சேரியும் கூட இல்லையே !



**ரேடியோ கேட்க வந்தவர்** :—உங்களுக்கு வைக்கத்தெரியலே. இப்பொழுது கடம்பூருக்குத் திருப்புங்கள் ; அங்கே ஒரு கல்யாணத்திலே நல்ல கச்சேரி நடக்கிறது.

**—எஸ். ஏ. கதிரேசன்.**

# சர்வ முகூர்த்தம்

"துமிலன்"

"சீனு, என்ன பண்ணுகிறாய்?" என்று சபேசன் கேட்டார்.

"தலை வாரிக் கொண்டிருக்கிறேன் மாமா. வகிடு கோணலாய்ப் போய் விட்டது" என்றான் சீனு.

"இங்கே வா!" என்றார் மாமா.

சீனு வந்தான். வந்ததும் "பீரோவிலே புதிதாகப் பௌடர் டப்பாவும், சாந்து டப்பாவும் வாங்கி வைத்திருக்கிறேன். எடுத்துக் கொள்" என்றார்.

"எந்தப் பீரோவிலே, மாமா?"

"சீ கழுதை! ரயில் வருவதற்கு நாழியாகி விட்டது. இப்போதான் வகிடு எடுத்துக் கொள்கிறானாம். பொட்டு இட்டுக் கொள்கிறானாம்! சம்பந்திகள் ஸ்டேஷனில் வந்து நிண்டாடுவா, ஓடுடா" என்று சபேசன் கோபமாகச் சொல்லவே சீனு கையிலிருந்த சீப்புடனேயே காரில் ஏறி ஸ்டேஷனுக்குக் கிளம்பினான்.

மறு நாள் ஞாயிறன்று சபேசன் புத்திரி பானுமதியைக் காசி அய்யர் குமாரன் 'நாராயணனுக்குப் பாணிக் கிரகணம் செய்து கொடுப்பதாயும், கல்யாணத்தை ஒரே நாளில் முடித்து விடுவதாயும், பாட்டுக் கச்சேரி வைப்பதாயும், மத்தியானச் சாப்பாட்டுக்கு ரஸ குல்லா போடுவதாயும் 'பெரியோர்கள்' நிச்சயித்திருந்தனர். அதற்காகக் காசி அய்யர் குடும்பத்தினர் சனிக்கிழமை காலை வண்டியில் வருவதாகத் தெரிவித்திருந்தபடியால் அவர்களை அழைத்து வருவதற்காகவே சீனு ஸ்டேஷனுக்குப் போனான்.

● அவன் போய் இரண்டுமணி நேரத்துக்குப் பிறகு திரும்பினான். தம்முடைய வண்டி ஹாரன் சபதத்தைக் கேட்ட சபேசன் தம் அங்கவஸ்திரத்தை எடுத்துப் போட்டுக்கொண்டு, சமபந்தியை வரவேற்பதற்காகப் பிரத்தியேகமாக ஒரு புன்னகை புரிந்து கொண்டு வெளியே கிளம்பினார். சபேசய்யர் சம்சாரம் சங்கரி அம்மாள் புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு கணவனைப் பின் தொடர்ந்தாள். கல்யாணப் பெண் பானுமதி தன் பெற்றோர்கள் கிளம்பிய மாத்திரத்தில் பதினைந்து மாடிப் படிகளை மூன்றே தாவில் தாவி மாடி அறை ஜன்னலில் போய் நின்றாள்.

வண்டி எதிர்த்த வீட்டு வாசலில் நின்றது. சம்பந்திகள் தங்குவதற்காக அந்த வீட்டை ஏற்பாடு செய்திருந்தனர். வண்டியிலிருந்து முதலில் சீனு இறங்கினான். அப்புறம் இறங்கியது ஒரு சாஸ்திரி. அதைப் பார்த்த சபேசனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"ஏண்டா! அவர்களெல்லாம் வரவில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை, மாமா!"

"நீ நன்றாகத் தேடிப் பார்த்தாயா?"

"ஒரு வண்டி விடாமல் பார்த்தேன் மாமா!"

"ஒரு வேளை உனக்கு அவர்களை அடையாளம் தெரியல்லையோ, என்னமோ? அவாத்து மாமி அரையணா அகலத்துக்குக் காதிலே வயிரத்தோடு போட்டுக் கொண்டிருப்பாளே" என்றாள் சங்கரி.

"எனக்கு அதெல்லாம் தெரியும். அவாத்துப் பெண்கூட ஒண்ணரைக் கண்ணு இருக்குமே. கிட்டத் தட்ட அவா மாதிரிகூட ஒருவரையும் காணோம். நான் தேடிப் பார்த்ததோடே இல்லை. "காசி அய்யர்வாள்! காசி அய்யர்வாள்" என்று கூடப் பிளாட்பாரத்திலே கூப்பிட்டுக் கொண்டே போனேன்."

"ஏண்டா! இப்படியெல்லாம் பண்ணுகிறே! நீ கத்துகிறதைப் பார்த்துவிட்டு ஏதோ ஸ்டேஷன் பேரைச் சொல்கிறேனு நினைத்துக் கொண்டிருப்பார்களே" என்று சபேசன் அவனைக் கடிந்து விட்டு அப்புறந்தான் சாஸ்திரிகளைக் கவனித்தார். அந்த சாஸ்திரிகள் சம்பந்திகளுக்கு வேண்டியவராம். அவர் "நான் ஊரை விட்டுக் கிளம்பி ஒரு வாரமாயிற்று. அவர்கள் இன்று கட்டாயம் வந்திருக்க வேண்டுமே! ஒருவேளை ரயில் தவறிப் போய்விட்டதோ என்னமோ சாயங்காலம் ரயிலில் வந்து விடுவார்கள்" என்றார்.

● சபேசன் தன் வீடு திரும்பியபோது அவருடைய பந்துக்கள் ஆளுக்கொன்று சொல்ல ஆரம்பித்தார்கள்.

"அவாள் வரப் போகிறார்கள் என்று ஏகப்பட்ட இட்லி வார்த்துக் காப்பி போட்டு வச்சிருக்கே. அதெல்லாம் என்ன பண்ணுகிறது?" என்று வருத்தப்பட்டாள் ஒரு பெண்மணி.

"அதற்கென்ன! சம்பந்திக்கு உறவு மனுஷாள்தான் இப்போதே இருபது முப்பது பேர் வந்திருக்காளே. நம் பாத்திலே வேறே ஐம்பது அறுபது பேர் ஆச்சு. சாமான் வீணாகப் போய் விடுமே யென்று கவலைப்பட வேண் டாம்" என்று ஒரு ஸ்திரீ கூறினான்.

"அப்படி வராதிருக்க மாட்டானே. என்னமோ ஏதோ நடந்திருக்கும்" என்றாள் ஒரு பாட்டி.

"சரிதான் உள்ளே போங்கோ" என்று சபேசன் அதட்டினார்.

அப்பொழுது மாடியி லிருந்து இறங்கி வந்தாள் பானுமதி. மாப்பிள்ளை வர வில்லை யென்று அறிந்த அவள், "ஒருவேளை நான் வோலக்கு சின்ன தாகப் போட்டுக் கொண்டிருந்தது அவ ருக்குப் பிடிக்கவில்லையோ என்னமோ? ஆனால் அன்று அவர் வந்திருந்தபோது என்னைச் சரியாகக் கூடப் பார்க்க வில்லையே. எங்கேயோ மோட்டுவளையை யல்லவா கவனித்துக் கொண்டிருந் தார்? ஆகையால் என்னைப் பிடிக்கா திருக்கக் காரணமில்லையே" என்று கவலைப்பட்டாள்.

"பானு! நீ கவலைப்படாதே! சாயங் காலம் வண்டியிலே உன் அகமுடை யான் கட்டாயம் வந்து விடுவான்" என்று அத்தை தைரியம் கூறினாள்.

● சாயங்காலமானதும் சபேசன் சீனு இரண்டு பேரும் ஸ்டேஷனுக்குப் போனார்கள். ஆனால் சாயங்காலம் வர வேண்டிய வண்டி வரவில்லை. ஸ்டேஷன் மாஸ்டரை விசாரித்தபோது அவர் "வண்டி இராத்திரி வந்தாலும் வரும். நாளைக்கு வந்தாலும் வரும்" என்று சொல்லிவிட்டார். சபேசன் இந்தப் பதிலைக் கேட்டு மனங் கலங்கிப் போனார். ஆனால் அவர் என்ன செய்ய முடியும்? சீனுவை ஸ்டேஷனி லேயே இருந்து பார்த்துக் கொண்டு வரும்படி சொல்லிவிட்டு வீடு திரும் பினார். அங்கே எல்லாரும் மாப்பிள்ளை அழைக்கப் போவதற்கு வேண்டிய ஏற் பாடுகளுடன் தயாரா யிருந்தார்கள். ஆனால் இரவு பத்து மணி வரையில் ஒரு தகவலும் கிடைக்காமற் போகவே மாப்பிள்ளை அன்று வருவான் என்ற நம்பிக்கையை இழந்தார்கள்.

மறுநாள் ஞாயிற்றுக் கிழமையும் ரயில் வரவில்லை. சபேசன் ஸ்டேஷன் மாஸ்டரிடம் போய் "ரயில் எப்பொ ழுது வரும் தெரியுமா?" என்று கேட்ட தற்கு அவர் "எனக்குத் தெரியவில்லை. உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங் கள்" என்று திருப்பிக் கேட்டார்.

அன்று முகூர்த்தம் பதினொரு மணிக்கு வைத்திருந்தது. கல்யாணத்துக்கு அழைத்திருந்த உள்ளூர் நண்பர்கள் பலர் வந்து கூடி விட்டார்கள். கடிகா ரத்தில் மணி பன்னிரண்டு அடித்தது. ஒன்றடித்தது. சம்பந்திகள், என்ற பேச்சே காணோம். கடிதம், தந்தி ஒன்றும் வரவில்லை. மணி இரண் டும் அடித்து விட்டது. சபேசன் மேலே இன்னது செய்வதென்று தெரியாமல் கலங்கினார். அப்பொழுது ஒரு ஜோசி யர் "நாளைக்குக்கூட முகூர்த்தம் நன்றா யிருக்கிறது. கல்யாணத்தை நாளைக்கு ஒத்திப் போட்டு விட்டால் போகிறது. நாளைக்குக்கூடவா வராமல் போகிறார்கள்? பார்க்கலாம்" என் றார். சபேசனுக்கும் இது சரியான யோசனை என்று தோன்றவே அப் படியே செய்ய ஒப்புக் கொண்டார். கூடி யிருந்த பந்துக்களுக்கும், நண்பர் களுக்கும் இது விஷயத்தைத் தெரி வித்து விட்டு அவர்கள் எல்லாரையும் சாப்பிட்டு விட்டுப் போகும்படி உப சாரம் செய்தார். விருந்து பலமாக நடந்தது.

பானுமதியின் மனோநிலைமை எப்படி யிருக்குமென்று நான் சொல்ல வேண் டியதில்லை. அவளுடைய பெற்றோர் களுக்கோ "நாலு பேர் பரியாசம் பண்ணுவார்களே" என்று நினைக்க நினைக்க அழுகையாக வந்தது.

அன்று சாப்பாடு ஆகி எல்லோரும் எழுந்திருந்தபோது மணி நாலு இருக் கும். விருந்தினர்கள் வெற்றிலை போட் டுக் கொண்டிருந்தபோது பாடக பூஷ ணம் பட்டாபிராமன் தமது ஜமாவுடன் வந்து சேர்ந்தார். மிருதங்கம் சுப்ப ராமன் கச்சேரி செய்வதற்காகக் கட்டி யிருந்த மேடையில் போய் உட்கார்ந்து கொண்டு மிருதங்கத்தின் உறையைக் கழற்றி அதைத் தடவிக் கொடுக்க ஆரமபித்தார்! அப்புறந்தான் அவர் ளுக்குக் கல்யாணம் நடக்கவில்லை யென்று தெரிந்தது. மூட்டையைக் கட்டிக்கொண்டு கிளம்பினார்.

பெண்ணுக்கும், பிள்ளைக்கும் பரிசு கொண்டு வந்திருந்தவர்கள் அவற்றைக் கொடுத்து விடுவதா, அல்லது திருப்பி எடுத்துக் கொண்டு போவதா என்று தெரியாமல் திண்டாடி விட்டு விட்டுக் குத் திரும்பினர்.

மறுநாள் திங்கட்கிழமை காலையில் சம்பந்திகள் வரவில்லை. ஆனால் அதற் காக சபேசன் தம்முடைய ஏற்பாடு களில் ஒன்றும் குறைத்து விடவில்லை. மாப்பிள்ளையை எதிர்பார்த்து, இஷ்ட

மித்திர பந்துக்களுடனும் வைதிகர்களுடனும் தயாராய் உட்கார்ந்திருந்தார். ஆனால் ஒரு மணி வரையிலும் மாப்பிள்ளையைக் காணோம்.

அப்பொழுது முதல் நாள் யோசனை சொன்ன அந்த ஜோசியர் "நாளைக்குச் செவ்வாய்க் கிழமை. அதைத் தள்ளி விடுங்கள். அப்புறம் புதன், வியாழன் வரிசையாக எல்லா நாளும் "நன்றாயிருக்கிறது. ஏதாவது ஒரு நாளிலே பண்ணி விட்டால் போச்சு" என்றார்.

கல்யாணத்துக்கு வந்திருந்தவர்களில் பலர் லாகூர், டார்ஜிலிங், கராச்சி, பாட்னா முதலிய தூரப் பிரதேசங்களிலிருந்து வந்தவர்கள். மறுபடியும் கல்யாணத்துக்காக லீவு வாங்கிக்கொண்டு வருவது அவர்களுக்குக் கஷ்டமாகத் தோன்றியபடியால் ஒரேயடியாகக் கல்யாணத்துக்கு இருந்து விட்டுப் போவதென்று தீர்மானித்து விட்டனர். ஆகவே, சபேசன் கல்யாணத்தை முதலில் புதன்கிழமைக்கு ஒத்திப் போட்டார்; புதன் கிழமையும் சம்பந்திகள் வராமற் போகவே வரிசையாக வியாழன், வெள்ளிக் கிழமைக்கு ஒத்திப் போட்டுக் கொண்டே போனார்.

இதற்கிடையே சபேசன் கல்யாணத்துக்கென்று வெகு நாள் முன்னமேயே சேகரித்து வைத்திருந்த பல சாமான்கள் செலவழிந்து விட்டன. முக்கியமாகச் சர்க்கரை ஆகிவிட்டது. அவர் எத்தனை விலையானாலும் கொடுத்து வாங்கத் தயார்தான். ஆனால் ஒரே சமயத்தில் மணங்கு மணங்காகச் சர்க்கரை யார் கொடுக்கிறார்கள்? இது விஷயத்தில் கல்யாணத்துக்கு வந்திருந்த பந்துக்கள் வேண்டிய உதவி செய்தார்களென்றே சொல்ல வேண்டும். அவர்கள் எல்லாரும் கடைகளுக்குப் போய் அரை வீசை, அரை வீசையாகச் சர்க்கரைப் பொட்டணங்களும் மற்ற சாமான்களும் வாங்கி வந்து கொடுத்து உதவினார்கள்.

● வெள்ளிக்கிழமையன்றும் ஒரு தகவலும் தெரியவில்லை. ஜோசியர் "ஞாயிற்றுக் கிழமை சர்வ முகூர்த்த நாள். சம்பந்திகள் அன்றைக்கு வந்து விடுவார்கள், என்று எனக்குத் தோன்றுகிறது. அன்றைக்கு நடத்தி விடலாமே" என்று சொன்னார். சபேசனுக்கு ஒன்றும் புரியவில்லை. "அப்படி அவர்கள் வரமுடியாமற் போனாலுஞ்சரி, இஷ்டமில்லாமல் போனாலுஞ்சரி கடிதமாவது போட்டிருக்கலாமே. அதுவுமில்லையே. ஏன்?" என்று தம்மைத்தாமே கேட்டுக் கொண்டார். பிறகு ஞாயிற்றுக்கிழமை

கடைசியாக முகூர்த்தம் வைத்துக் கொள்வதென்றும் அன்று அவர்கள் வராவிட்டால் அப்புறம் கல்யாண ஏற்பாடுகளை நிறுத்திவிட வேண்டியது தான் என்றும் தீர்மானித்தார்.

● கல்யாணத்துக்கு வந்திருந்த ஸ்திரீகளிடையே பலவிதமாகப் பேச்சு நடந்தது.

"இதுமாதிரி கல்யாணத்தை ஒத்திப் போட்டு நான் பிறந்தது முதல் பார்த்தது கிடையாது" என்று ஒரு அம்மாள் சொன்னாள். பிறந்த தினமே உலக விஷயங்கள் தனக்கு அற்றுப்படியாகப் போய்விட்டதாக அவளுக்கு எண்ணம்.

"இன்னொரு அம்மாள் சொன்னாள்: நான் "என் பெண்ணுக்கு வரன் பார்க்கிறதுதற்குக் கூட நான் இப்படிக் கஷ்டப் பட்டதில்லை. பாரு! நேற்று இங்கே ஒரு பிள்ளை கல்யாணம் விசாரிக்க வந்திருந்தது. அதன் ஜாதகத்தை நான் பார்க்கச் சொன்னேன். சரியாக இருந்தது. உடனே நான் கல்யாணம் நிச்சயம் பண்ணச் சொல்லி விட்டேன்" என்று சர்வாதிகாரிகள் தோரணையில் பேசினாள்.

"நான் உங்களிடம் சொல்ல வேண்டாமென்றிருந்தேன். என் பிள்ளை இவாத்துக்கு வந்திருந்த ஒரு பெண்ணைப் பார்த்தான். அவளும் இவனை அவன் ரஸகுல்லா தின்று கொண்டிருந்த போது பார்த்தாளாம். அதிலிருந்து இரண்டு பேருக்கும் காதல் ஏற்பட்டு விட்டது. அந்தப் பெண்ணைப் பற்றி விசாரிக்கத்தான் நேற்றைக்குப் போனேன். கல்யாணம் அநேகமாக நிச்சயமாணுப்பலேதான்" என்றாள் இன்னொரு ஸ்திரீ.

"என்னைக் கேட்டால் இந்தப் பிராமணன் இதுமாதிரி மாப்பிள்ளை வரவேணுமென்று இண்டாட வேண்டாம். பேசாமல் இன்னொரு பிள்ளைக்குக் கொடுத்து விடலாம்" என்று மற்றொருத்தி கூறினாள்.

"அது நன்றாயிருக்குமா?"

"ஏன் இருக்காது? ஜாதகம் சரியாயிருக்கணும். எதிர் ஜாமீன் என்ன கேட்கிறார்களா? அதைக் கொடுத்து விட வேண்டும். அவ்வளவுதானே, அதைத் தவிர நாம் வேறு என்ன பார்க்கிறோம்?" பிள்ளைக்குப் பெண் பிடிக்கிறதா பெண்ணுக்குப் பிள்ளை பிடிக்கிறதா என்று பார்க்கிறோமா? அப்படி ஏதோ மேலுக்குப் பார்த்தாலும் ஜாதக விஷயம், பண விஷயம் குறுக்கிட்டால் கண்ணை மூடிக்கொண்டு அந்த வரனைத் தள்ளி விடுகிறோம். அதே மாதிரி இன்னொரு பையனைப் பிடிச்சால் போச்சு" என்றாள்.

● ஆனால் நல்ல வேளையாக இந்த அம்மாளின் யோசனைப்படி நடப்பதற்கு இடங் கொடுக்காமல் சனியன்று காலையில் சம்பந்தி காசி அய்யர் தம் குடும்பத்தினருடன் வந்து சேர்ந்தார்.

ரயில் தவறியவர்கள் வந்து சேர்ந்தால் பேசவும் வேண்டுமோ! ஒரே அமர்க்களப்பட்டது.

காசி அய்யர் இரண்டு தந்திகள் அடித்துக் கடிதமும் போட்டிருந்தாராம். ஆனால் அவை ஒன்றும் சபேசனுக்கு, வந்து சேரவில்லை. அதனால்தான் இவ்வளவு கலக்கமும்.

அன்று எல்லாரும் காப்பி சாப்பிட்டு விட்டுச் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தபோது சபேசய்யர் "எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அதன்படி செய்தால் ரொம்ப பேஷாயிருக்கும். ஆனால் அதற்கு நீங்கள் எல்லாரும சம்மதிக்க வேண்டுமே" என்றார்.

"என்ன, என்ன?" என்று பலர் ஏககாலத்தில் கேட்டார்கள்.

"இந்த ஒரு வாரமாக எல்லாரும் சேர்ந்திருக்கச் சந்தர்ப்பம் ஏற்பட்டதிலே ஐந்து கல்யாணங்கள், நிச்சயமாயிருக்கு. எல்லாவற்றையும் சேர்த்தாப்பலே நாளைக்கே நம்பாத்திலே பண்ணி விட்டாலென்ன?" என்றார்.

"சரியான யோசனை!"

"காலம் இருக்கிற இருப்பிலே இப்படிச் சேர்த்துப் பண்ணுகிறதுதான் நல்லது."

"கல்யாணப் பிள்ளை வராரோ வல்லையோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம்" என்று வந்திருந்தவர்கள் தலைக்கு ஒன்று சொல்லி சபேசய்யர் சொன்னபடி செய்ய ஒப்புக் கொண்டார்கள்.

● மறுநாள் சபேசய்யர் வீட்டில் ஐந்து கல்யாணங்கள் நடந்தேறின.

நாராயணன் மந்திரஞ் சொல்வதற்கு நடுவில் பானுமதி பக்கம் திரும்பிய போது அவள் தன்னைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தான்.

அவள் அவனைப் பார்த்தது, "ஏழுநாள் கழித்தா வந்தீர்கள்! இருக்கட்டும். இருக்கட்டும். சாவகாசமாகப் பேசிக் கொள்கிறேன்" என்று சொல்வது போலிருந்தது.

# BACK TO MADRAS

# Sastry & Sastry

## *JEWELLERS*

*Nos. 26 & 27, East Mada Street,*

MYLAPORE, :: MADRAS.

இனி
தலைவலி
ஒழிந்தது

## ஸாரிடோன்

சகலவலிகளையும் நிவர்த்திக்க ஓர் சிறந்த மருந்து

Saridon

வைத்தியர்களும் விரும்பும் 3 இணையற்ற குடும்ப சஞ்சீவிகள்

ஸ்ரீகார கஸ்தூரி ஸ்ரீகார கோரோஜன மாத்திரைகள்

மூன்றும்
ரூ. 1-4-0
6 செட்
செலவின்றி

நஞ்சன்கூடு பல்பொடி

I.D.L.61, மெடிகேடட்

4 மாத
அளவு
ரூ. 1-0-0
போசிகளை
மறக்க

கிரேடோன் Graytone

ரூ. 1-0-0
ரூ. 3-12-0

யுனைடெட் கம்பெனி, பந்தர் தெரு மதராஸ் (உதவி வைத்தியர் Dr. P. S. C. மணி)
(கோவை : 234, ராஜா வீதி) (திருச்சி : சைனா பஜார்) (மதுரை : 42, தெற்காவணி)

## அரட்டைக் கச்சேரி

● "ஓ! வேலைக்காக வந்தேளா! மறந்து போச்சு. மன்னிக்க வேண்டும். ஆமாம், ஒரு வேலை இருக்கு. சீக்கிரமே காலி யாகும் போல் தோன்றுகிறது. அதற்கு வேண்டுமானால் ஒரு மனுப் போட்டு வையுங்களேன்!" என்றார் வாயாடி வராகசாமி.

"எந்த ஊரிலே, என்ன சம்பளம், என்ன வேலை, அதெல்லாம் ஒன்றும் சொல்லாமல் மனுப் போடு என்றால்?"

"டில்லியிலே வேலை."

"டில்லியா? அத்தனை தூரத்திலா? அதற்குத் தகுந்த சம்பளம் கொடுத்தால் வேணுமானால் பார்க்கலாம்."

"சம்பளத்தைப் பற்றிக் கவலைப்படாதேயும். அதெல்லாம் நிறையச் சம்பளம் கொடுப்பார்கள்."

"அப்படியென்றால் அந்த வேலை எனக்குக் கிடைக்கும்னு என்ன நிச்சயம்?"

"உமக்குக் கிடைக்காமல் என்ன ஐயா? ஆனை கிடைக்காமல் நின்டாடிண்டு இருக்கா என்று கேள்வி. போறேன், போறேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிற ஆனையே கழுத்தைப் பிடித்து வச்சுண்டிருக்கா!"

"அப்படி அது என்ன வேலையோ?"

"வைஸராய் வேலை, ஸ்வாமி, வைஸராய் வேலை."

"ஐயோ!"

"என்காணும் மிரளுகிறீர்? நல்ல உத்தியோகம்; மாதம் இருபத்தையாயிரம் ரூபாய் சம்பளம்; குடி யிருப்பதற்குப் பெரிய அரண்மனை ......"

"என்ன, சுவாமி! பரிகாசம் பண்ணுகிறீரா? அவ்வளவு பெரிய உத்தியோகமா யிருந்தால் அதற்கு இன்னும் எத்தனையோ பேர் மனுப் போட்டிருக்க மாட்டார்களா?"

"அதுதானே இல்லை! சீமையிலே யார் யாரையோ முகவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுகிறார்களாம். எல்லாரும் 'எனக்கு வேண்டாம்' 'உனக்கு வேண்டாம்' என்கிறார்களாம்."

"சரிதான்; பெரிய உத்தியோகமானதால் யோக்கியதாம்சமும் அதிகமா யிருக்க வேண்டும் போலிருக்கிறது. கிராமத்திலே மாடு மேய்த்துக் கொண்டிருந்தவனுக்குக் கொடுப்பார்களா?"

"என்ன சொன்னீர்? என்ன சொன்னீர்?"

"ஊரிலே மாடு மேய்த்தேன் என்றேன்."

"உய் பிச்சுவய்யரே! அப்படியானால் நீர் தான்காணும் வைஸராய் வேலைக்குச் சரியான ஆசாமி! இப்போதுள்ள வைஸராய்க்கு என்ன யோக்கியதாம்சம் தெரியுமோ? மாடுகள் விஷயத்தில் பெரிய நிபுணராம். அதனால்தான் அவருக்குக் 'காளை மாட்டு வைஸராய்' என்றே பெயர்."

"உபோதா! அப்படியானால் சரி! வேலை ஒப்புக்கொண்டால் என்னென்ன செய்ய வேணுமோ?"

## கேட்டுப் பாருங்கள்!

ஜூன் மீ 1உ. சென்னையில் பாருபள்ளி ராமகிருஷ்ணய்ய பந்துலுவின் பாட்டு.

திருச்சியில் காலை 8-30 க்கும் மாலை 6 மணிக்கும் சுவாமிமலை கலியாணசுந்தர தேசிகரின் தமிழிசை.

2உ. சென்னையில் துறையூர் ராஜகோபால சர்மா இரவில் இருமுறை பாடுகிறார்.

3உ. திருச்சியில் தஞ்சாவூர் நாணுவின் கச்சேரி. இளம் சங்கீத கோஷ்டியில் அபிப்பிராய பேதமின்றி "உயர்ந்த பாட்டு" என்று பெயர் வாங்கியவர். இவருடைய கச்சேரி சென்னையில் அஞ்சல் இல்லாதது மற்றொரு ரேடியோ மர்மம்.

அன்று சென்னையில் 8 மணிக்கு டொக்கா ராமமூர்த்தி காருவும், 8-45 க்கு டெக்கா ராமமூர்த்தி காருவும் பாடுகிறார்கள்! பாட்டு, வெகு டக்கா யிருக்குமென்று தோன்றுகிறது.

4உ. சென்னையில் ஸ்ரீமதி ருக்மணி ராஜகோபாலன் இருமுறை பாடுகிறார்.

5உ. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி.

6உ. திருச்சியில் தஞ்சாவூர் எம். தியாகராஜன் முழுக் கச்சேரி செய்கிறார். இவருடைய 'பாணி'யுள்ள பாட்டைக்குறித்து முன் னொரு தடவை எழுதியிருக்கிறோம். இந்தத் தடவை புரோகிராமைப் பார்த்தால் இந இளம் பாடகர் அதிகமாக உருப்பட்டு முன்னுக்கு வரக்கூடாது என்று யாரோ விரும்புவதாகத் தெரிகிறது. அந்த மகான் யாரோ தெரியவில்லை.

அன்று திருச்சியில் வீணையுடன் ஸ்ரீமதி டி. பாலம்மாள் செய்யும் தமிழ்க் கச்சேரியைக் கேட்டுப் பார்க்கலாம்.

7உ. திருச்சியில் காரைக்குடி சாம்ப சிவய்யர் வீணை.

8உ. சென்னையில் ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கத்தின் புல்லாங்குழல்.

10உ. சென்னையில் லக்ஷ்மி — சரஸ்வதி ராமசுப்பன்கள் பாடுகிறார்கள்.

திருச்சியில் பாலக்காட்டு ராம பாகவதர் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை வயலினுடன் சக்கைப்போடு போடுகிறார்.

---

"ஒன்றும் பிரமாதமில்லை. ஜிப்பாவோடு சண்டை போட வேணும்."

"என்ன? என்ன?"

"நீர் போட வேண்டாங்காணும். மற்றவர்களைச் சண்டைக்கு அனுப்ப வேண்டும்!"

"அப்படியானால் சரி. இன்னும்?"

"காந்தி, ஜவாஹர்லால் முதலியவர்களை ஜெயிலில் வைத்திருக்க வேண்டும்."

"ஐயையோ! எனக்கு வேண்டாம், ஸ்வாமி, வைஸராய் உத்தியோகம்!"

# அந்தப்புரப் பேச்சு

"அநஸூயை"

● "சீதா! எங்கே, இரண்டு நாளாய்க் கண்ணிலேயே காணோம்?" என்று விசாரித்தாள் ராதா.

"வீட்டிலே ஒரே விருந்தாளிக் கூட்டம். குறைஞ்சது பத்துப் பேர் வந்திருப்பா!" என்றாள் சீதா.

"இன்னும் கொஞ்ச நாள் போனால் அவர்கள் இப்படி வந்து விருந்து சாப்பிட முடியாமற் போனாலும் போய்விடும்."

"ஏன்?"

"சர்க்காரிலே 'ஒரு வீட்டில் ஒரு நாளைக்கு இரண்டு பேருக்கு மேல் விருந்து சாப்பிடக் கூடாது' என்று உத்தரவு போட்டு விடலாமோன்னோ?"

"நிஜமாகவா?"

"ஆமாம்! இன்னும் 'காக்காய் மனிதர்கள் வசிக்கும் வீட்டுக்குப் போய்க் கத்தக் கூடாது' என்றுகூட உத்தரவு கிளம்பும்."

"போ, ராதா, பரிகாசம் பண்ணுகிறாய்!"

"காக்கை கத்தினால்தானே விருந்தாளிகள் வருகிறார்கள்? ஆகையினாலே காக்கையே கத்தாதிருக்கும்படி உத்தரவு போட்டு விட்டால் போச்சு."

"அவ்வளவு மோசத்துக்கு வராது."

"ஏன் வராது? இப்போ பம்பாயிலே நடக்கிற கல்யாணங்களுக்கு ஐம்பது பேருக்கு



மேல் விருந்தாளிகள் வரக்கூடாது என்று ஒரு சட்டம் போட்டிருக்கிறார்களே, தெரியுமா?"

"கேள்விப்பட்டிருக்கிறேன்."

"இரண்டு நாள் முன்னாடி ஒருவர் வீட்டிலே தொண்ணூற்றேழு பேர் சாப்பிட்டார்களாம். அதற்காக வீட்டில் முக்கியஸ்தர் இரண்டு பேரைப் போலீஸ்காரர் அரெஸ்ட் பண்ணி விட்டார்களாம்."

"முக்கியஸ்தர்களென்றால்? மாப்பிள்ளையையும், பெண்ணையுமா!"

"இல்லை, இல்லை."

"பின்னே? சமைக்கிற பரிசாரகர்களில் இரண்டு பேரையா?"

"இல்லை. சாமான் சப்ளை செய்தவரையும் விருந்துக்குக் கூப்பிட்டவரையும்."

"அரெஸ்ட் பண்ணி என்ன பண்ணினார்களாம்?"

"ஜாமீனிலே விட்டிருக்கிறார்களாம்."

"ஐம்பது பேருக்கு மேலே அழைக்கக் கூடாது என்று சட்டம் இருக்கிறபோது எதற்காக அத்தனை பேரை அழைக்கணும்?"

"அவா பேரிலே தப்பில்லே. சரியாக நாற்பத்தொன்பது பேருக்குத்தான் டின்னர் கார்ட் அனுப்பி இருந்தாளாம். ஆனால் ஏகப்பட்ட பேர் வந்துட்டா."

"பாவம், அவா என்ன பண்ணுவா! நம்ம தேசத்திலே சாப்பிட வந்த பேரை மென்னியைப் பிடித்துத் தள்ளுகிற வழக்கமில்லை யோன்னோ? சாப்பாடு போட்டாளாக்கும். ஆனால் இதற்கு என்ன பரிகாரம்? கல்யாணம் சம்பந்தப்பட்ட வீட்டு மனுஷாளே குறைந்தது முப்பது, நாற்பது பேர் ஆகிவிடுவா! அப்புறம் எந்த சிநேகிதாளைக் கூப்பிடுகிறது? யாரை வேண்டாமென்கிறது? கூப்பிடாத பேர் மனஸ்தாபப் படமாட்டார்களா? அது மாதிரி நம்ப ஊருக்குச் சட்டம் வந்தால் என்ன பண்ணுகிறது?" என்று சீதா கேள்விமேல் கேள்வி கேட்டுக்கொண்டே போனாள்.

"சத்தியமாக நம்ம ஊருக்கு வரவில்லை. வந்த பிறகு அதைப் பற்றிப் பார்த்துக் கொள்ளலாமே. யாருக்கும் சாப்பாடு என்று போடாமல் கையில் பிரசாதம் மாதிரி கொஞ்சம் கொடுத்தனுப்பி விடுகிறது" என்றாள் ராதா.

"அதெல்லாம் முடியாது. உங்காத்திலே கல்யாணம் வந்தால் நான் உட்கார்ந்து ஆற அமரத்தான் சாப்பிடப் போகிறேன்" என்று சீதா சொன்னாள்.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the
116-119, Sladens Garden ~ ~onamallee High Road, Kil-